சல்லாபம் செய்யும் சிவராம் ஒரு லட்சியக் கணவனாகத் திகழ்கிறான்; குழந்தைகளோடு விளையாடும் சிவராம் ஒரு குதூகலத் தந்தையாக விளங்குகிறான்; தடியை எடுத்துக் கொண்டு தனயனை வெளுத்து வாங்குவதாகப் பாசாங்கு செய்து மெத்தையைப் பதம் பார்க்கும் சிவராம், ஹாஸ்ய உணர்ச்சி மிக்க அப்பாவாகத் தோன்றி எல்லோரையும் சிரிக்க வைக்கிறான்.

இழந்த ஐந்து லக்ஷ ரூபாய்த் தங்கத்துக்கு வழி சொல்ல முடியாத சிவராம் நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டு ஊர் ஊராக அலைந்து திரிகிறான்; தோட்டி வேலை செய்கிறான். இந்தக் கட்டங்களிலெல்லாம், ஸ்ரீ வி. நாகையாவின் நடிப்புத் திறமை சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது.

சிவராமின் மக்கள் இசையுலகில் முன்னணிக்கு வந்து திருச்சியில் ஒரு கச்சேரி செய்கின்றனர்; அந்தக் கச்சேரி விளம்பரத்தைத் தோட்டியாக இருக்கும் சிவராம் பார்த்து ஆனந்தபாஷ்பம் சொரிகிறான்; தன் அருமைக் குழந்தைகளின் கானத்தைக் கேட்க விரும்பி, கையில் இருக்கும் சில்லறையைச் சபை வாசலில் கொடுத்து விட்டுச் சிவராம் உள்ளே நுழைகிறான்; கச்சேரி கேட்கிறான்; கச்சேரியில் கடைசியாகக் "கொஞ்சு மொழி மைந்தர்களே" என்ற பாட்டு அமைகிறது: அப்பொழுது தந்தை சிவராம் படும்பாடு, அப்பப்பா! பொங்கிப் பொருமி, விம்மி வெடித்து, மெய் விதிர்த்து, கண்ணீர் பெருகித் தவிக்கும் காட்சியில் ஸ்ரீ நாகையாவின் நடிப்பு சிகரத்தை எட்டி, அதற்கு மேலேயும் போய் விடுகிறது!

ஸ்ரீமதி டி. ஆர். ராஜகுமாரி இதுவரையில் நடித்திருக்கும் படங்களிலெல்லாம் இளம் நங்கையாகத் தோன்றிக் காதல், சோகம் முதலிய கட்டங்களில் நடித்திருக்கிறார்.

இந்தப் படத்தில் ஸ்ரீமதி ராஜகுமாரி, பதிக்கேற்ற பத்தினியாகவும், குடும்பத்துக்கு ஏற்ற குல விளக்காகவும், மக்களைப் பொறுப்புடன் வளர்க்கும் மனைத் தலைவியாகவும் தோன்றுகிறார். ஒரு நல்ல நடிகை சரியான பாத்திரத்தையும் தாங்கி நடித்தால், அதை விட மகிழ்ச்சி அளிக்கக் கூடியது வேறு என்ன இருக்க முடியும்?

ஸ்ரீ டி. எஸ். பாலையா திரையில் வருகிறார் என்றால், ஒரு படுபோக்கிரியின் நினைவுதான் எல்லோருக்கும் வரும்.

நல்லவனாக ஒரு படத்தில் வேடம் தாங்கி நடித்து நல்ல பெயர் வாங்குவதை விடப் பொல்லாதவனாக நடித்து நல்ல பெயர் வாங்குவது மிகவும் சிரமம். அந்த அரிய காரியத்தை நடிகர் பாலையா இந்தப் படத்தில் தனபாலாகத் தோன்றி அபாரமாகச் சாதித்திருக்கிறார்.

"என் வீடு", குடும்பத்தாருடன் கூச்சப்படாமல் போய்ப் பார்க்கக் கூடிய படம்.

பல கட்டங்களில் சிறந்த நடிப்புத் திறமை சுடர்விட்டு ஒளிரும் உயர்தரமான படம்.

நம் நாட்டு வாழ்க்கைப் பண்பாட்டையும், கலைப் பண்பாட்டையும் எந்தவிதத்திலும் குறைவு படுத்தாமல் அவற்றை மேன்மைப் படுத்தும் படம்.

ஒளிப்பதிவு, ஒலிப்பதிவு, காட்சி ஜோடனை, பின்னணிச் சங்கீதம் ஆகியவை எப்படி எப்படி இருக்க வேண்டுமோ அப்படி அமைந்திருக்கும் படம்.

இவ்வளவு சொன்ன பிறகு, "இந்தப் படம் வெற்றி பெறுமா? பொது ஜனங்களின் உள்ளங்களைக் கவருமா? ஒரு தடவைக்கு மூன்று தடவையாகப் பார்க்கச் செய்யுமா? 'பாக்ஸ் ஆபீஸ் ஹிட்' ஆகுமா? அதாவது பண வசூல் நிறைய ஆகுமா?" என்ற கேள்விகளை நாமே எழுப்பிவிட்டுக் கொண்டு பதிலும் சொல்ல வேண்டியதா யிருக்கிறது.

[இல்லாவிட்டால், ஸினிமாத் தொழிலில் சம்பந்தம் உடைய பிரபலஸ்தர்கள் நாளைக்கு நம்மைப் பார்த்து "பத்திரிகைகள் எல்லாம் சேர்ந்து யானை, குதிரை என்று ஆகாசத்தில் தூக்கி வைத்துப் புகழ்ந்தீர்களே? அந்தப் படத்தின் பண வசூல் என்ன தெரியுமா? உங்கள் பேச்சைக் கேட்டு நாங்கள் உயர் தரப் படத்தை எடுத்தால் உருப்பட்டாற் போலத்தான்!" என்று சொல்லக் கூடும்.]

"என் வீடு" என்னும் படம் இரண்டு வருஷத்துக்கு முன்னால் வெளியாகி யிருந்தால் பண வசூல் நோக்கிலிருந்தும் முதல் தர வெற்றியாக அமைந்திருக்கும்.

இரண்டு வருஷத்துக்குப் பிற்பாடு வெளியாகி யிருந்தாலும் ஒரு வேளை 'பாக்ஸ் ஆபீஸ் ஹிட்' ஆகியிருக்கும்.

சமீபத்தில் ஒன்றன் பின் ஒன்றாகத் தென்னாட்டில் பல குடும்ப வாழ்க்கைப் படங்கள் வெளியாகிப் படம் பார்ப்பவர்களை அலுத்துப் போகச் செய்திருக்கின்றன.

அவ்வளவு படங்களுக்குப் பிற்பாடு, ஆனால் உடனடியாகத் தொடர்ந்து "என் வீடு" வெளியாகி யிருக்கிறது.

தென்னாட்டின் மத்திய வகுப்பாரின் வாழ்க்கை ஏறக்குறைய ஒரே விதமானது ஆகையால் படத்தைப் பார்க்கும் போது "இதை அந்தப் படத்தில் பார்த்தமாதிரி இருக்கிறதே? இதை இன்னொரு படத்தில் கேட்டிருக்கிறோம் போலிருக்கிறதே?" என்று தோன்றிக் கொண்டிருப்பது இயல்பு.

ஆகையால், "என் வீடு" என்னும் படம் உயர்தரமான படமா யிருந்தாலும் பண வசூல் அம்சத்தில் இதன் வெற்றி சுமாராகத் தான் இருக்க முடியும்.

நம்நாடு ஸினிமாக் கலைத் துறையில் முன்னேற வேண்டும் என்ற அக்கறையுள்ளவர்கள் அனைவரும் "என் வீடு" படம் பண வசூல் துறையிலும் வெற்றி தர வேண்டும் என்று நிச்சயம் விரும்புவார்கள். நல்லவர்களின் விருப்பம் ஓரளவேனும் நிறைவேறாமற் போகாதல்லவா?

# இதுவன்றோ திருவிழா!

**ரா. கி.**



இந்தக் காலத்தில் எத்தனையோ விதமான திருவிழாக்கள் நடைபெறுகின்றன. திறப்பு விழாக்களைக் கணக்கிட முடியாது. சோடாக் கடை வைப்பவர் யாரேனும் ஒரு பிரமுகரை அழைத்து முதல் சோடா புட்டியை உடைத்துத் திறப்பு விழா நடத்துகிறார். டீக்கடைகள், பீடிக்கடைகள், பெட்ரோல் கடைகள் எல்லாவற்றுக்கும் திறப்பு விழாக்கள் நடைபெறுகின்றன. அவரவர்களுக்கு அவர்களுடைய தொழில் முக்கியமானது. ஆகையால் எல்லாவற்றுக்கும் திறப்பு விழாக்கள் நடைபெற வேண்டியதுதான்.

ஆனாலும் சில நாளைக்கு முன்பு விழுப்புரத்துக்கு ஒரு காத தூரத்தில் உள்ள சிறுவந்தாடு என்னும் கிராமத்தில் நடந்த திறப்பு விழாவைப் போன்ற சிறப்பான திருவிழாவை நான் பார்த்தது கிடையாது. அந்த ஊரில் ஒரு கிராம ஆஸ்பத்திரி கட்டி அதற்குத் திறப்பு விழா நடத்தினார்கள். அந்த ஆஸ்பத்திரிக்கு நம் மாஜி பிரதமர் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாரின் பெயரை வைத்தார்கள்.

"இதுவன்றோ திறப்பு விழா
இதுவன்றோ திருவிழா !" என்,
வந்திருந்தவர்கள் அனைவரு
வியக்கும்படியாக நடத்தினார்கள்

* * *

ஓமந்தூர் ரெட்டியார் இ
போதெல்லாம் ஒதுங்கி ஒதுங்கி
போய்க் கொண்டிருக்கிறார். வ
லூர் வெளியில் அன்றொரு நா
பூத உடலுடன் மறைந்துவிட்
ஸ்ரீ ராமலிங்க அடிகளாருட
அந்தரங்கத் தொடர்பு கொண்
ஆத்மீக ஆனந்தத்தைத் தே
வதில் ஈடுபட்டிருக்கிறார் என்,
சிலர் சொல்லுகிறார்கள். ஓம
தூராரின் பெயரை நமக்கு ஞா
கப்படுத்தும் கைங்கரியத்தை
சில நாள் முன்பு வரையில் பழ
கடைக்காரர்கள் தான் செய்,
வந்தார்கள். "ஓமந்தூரா
திராட்சை" என்று ஒரு வித
திராட்சைப் பழத்துக்குப் பெய
கொடுத்து விற்பனை செய்,
வந்தார்கள். ஓமந்தூராரின் பழ
தோட்டத்திலிருந்து வந்த,
னாலே அதற்கு அந்தப் பெயர
அல்லது ஓமந்தூராரிடம் உள்
பக்தியினால் அதற்கு அந்த
பெயர் கொடுத்தார்களா எ
பது தெரியவில்லை. ஓமந்தூரா
ரின் சுபாவம் என்னமோ அந்,
திராட்சைப் பழத்திடம் ஓரள
இருந்தது. சில சமயம் இனி
கும்; சில சமயம் புளிக்கும்
சில சமயம் கடுகடுப்பாக முக,
த்தைச் சுளித்துக் கொண்டு மிரு
கும். ஆனால் சாரம் மிகுந்த ச,
துள்ள பழம்.

ஓமந்தூர் ரெட்டியார் வி
சாய முன்னேற்றத்தில் மிக்
பற்று உள்ளவர். ஆகையா
இந் நாட்டில் உற்பத்தியாகு
ஒருவகை திராட்சைப்பழத்துக்(
அவருடைய பெயரைக் கொடு;
த்தது பொருத்தமானதுதான்.

அதுபோலவே ஓமந்தூர் ரெட்டியார் கிராம
களின் நல்வாழ்வில் மிக்க அக்கரை உள்ளவர்
"கிராமங்களிலிருந்து பணத்தை அள்ளிக்கொண்(
வந்து பட்டணங்களில் கொட்டுகிறார்களே! கிர
மங்களில் உள்ள மண்குடிசைகளும் கூரையில்லா,
குட்டிச் சுவர்களாகி வருகின்றன. நகரங்களி
மாடிக்கு மேல் மாடி வைத்து மாளிகை கட்டி
கொண்டிருக்கிறார்களே!" என்று எத்தனையே
தடவை எரிச்சலுடன் கூறியிருக்கிறார்.

ஆகவே, ஒரு கிராமத்தில் எல்லாவித வைத்தி
வசதிகளுடனும் புதிதாகக் கட்டப்பட்டிருக்கு
ஆஸ்பத்திரிக்கு ஓமந்தூராரின் பெயரை வை,
த்தது சாலப் பொருத்தமானது அல்லவா!

* * *

இத்தகைய பொருத்தமான கிராமத் திரு
பணியைச் செய்ய முன் வந்த சிறுவந்தாடு கிராம,
த்தினர் நீண்ட காலமாகத் தமிழ் நாட்டில் தேசிய
போராட்டங்களிலும் நிர்மாணத் தொண்டுகள

ழும் முன்னணியில் நின்று வந்திருக்கிறார்கள். 'காங்கிரஸ் மகாநாடுகளை இனி கிராமாந்தரங்களில் நடத்த வேண்டும்" என்று காந்திமகான் தெரிவித்த போது, முதன் முதலாகக் கிராமத்திலே நடந்த தமிழ் மாகாண மகாநாடு சிறுவந்தாடு கிராமத்திலே தான் நடந்தது. அப்போதும் மிகச் சிறப்பாக மகாநாடு நடத்தினார்கள். சிறுவந்தாடு கிராமப் பிரமுகர்களில் ஸ்ரீ எஸ். டி. சின்னசாமி ரெட்டியார் ஒருவர். 1927-ம் ஆண்டில் ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார் ஒருமுறை திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்திற்கு ஓமந்தூர் ரெட்டியாருடன் வந்திருந்தார். அங்கு அப்போது நடந்து வந்த கிராமப் பணிகளைப் பார்த்துக் கொண்டு போனார். ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார் காந்தி மகானிடம் அளவற்ற பக்தி கொண்டவர்; அடுத்தபடியாக ஓமந்தூராரிடம் பக்தி கொண்டவர். காந்திமகான் காட்டிய வழிகளில், தேசியப் போராட்டங்களில் ஈடுபட்டவர். அவரும் அவரது மனைவியாரும் சுதந்திரப் போரில் சிறை சென்றிருக்கிறார்கள். சிறை சென்ற தோடல்லாமல், ஒரு கிராமத்தி லிருந்து கொண்டு காந்தி மகானுக்கு உகந்த நிர்மாண வேலைகளை எவ்வளவு உற்சாகமாகவும் திறமையாகவும் செய்யலாமோ, அப்படிச் செய்து வந்திருப்பவர். ஓமந்தூரார் ஆஸ்பத்திரி' அவருடைய கிராம நலத் தொண்டுகளில் சிகரம் போன்றது. அந்தச் சிகரத்தின் மீது ஒரு பொன் விளக்கை ஏற்றி வைத்தது போல் ஆஸ்பத்திரியின் திறப்பு விழாவையும் சிறப்பாக நடத்தி வைத்தார்.

ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார் பெரும் செல்வரல்லல; அவர் தமது தனி முயற்சியினால் இந்த அரும்பெரும் காரியத்தைச் செய்து விடவில்லை. சிறுவந்தாடு கிராமவாசிகளின் உற்சாகமான ஒத்துழைப்புடனும் ஸ்ரீ லக்ஷ்மி நாராயண ரெட்டியார் முதலிய சகாக்களின் உதவியுடனும்தான் செய்தார். சொந்தமாகச் செய்வதைக் காட்டிலும் இது பெரிய சாதனை என்று சொல்வது மிகையல்ல. நம் நாட்டிலேயே பொதுக் காரியங்களில் ஒத்துழைத்து வேலைசெய்யும் மனப்பான்மை குறைவு. அதிலும் கிராமவாசிகளிடையே சொல்ல வேண்டியதில்லை. ஆதலின் ஸ்ரீ சின்னசாமி ரெட்டியாரின் சாதனை அபாரமானது என்பதில் சந்தேகமில்லை. இந்த முயற்சியை அவர் முதன் முதலில் சென்னையில் ஸ்ரீ டி. பிரகாசம் மந்திரி சபை ஏற்பட்டபோது ஆரம்பித்தார். அப்போது சுகாதார மந்திரியாயிருந்த ஸ்ரீமதி லக்ஷ்மிபதி அம்மையாரிடம் சென்று, "அம்மா! தாயே! என்னிடம் எண்ணூறு ரூபாய் இருக்கிறது. இதை எடுத்துக் கொண்டு எங்கள் கிராமத்தில் ஒரு ஆஸ்பத்திரி கட்டித் தந்து சர்க்கார் பொறுப்பில் அதை நடத்திவர வேண்டும்!" என்று விண்ணப்பித்துக் கொண்டார். "அதற்கென்ன! ஒரு ஆயுர்வேத மருந்துக் கடை வைத்தால் போகிறது!" என்றார் ஸ்ரீமதி லக்ஷ்மிபதி. "இல்லை; இல்லை! நவீன இங்கிலீஷ் முறையில் ஆஸ்பத்திரி கட்டி, இங்கிலீஷ் முறையில் பயின்ற டாக்டர், நர்ஸ் ஆகியவர்களை அனுப்பித் தரவேண்டும்" என்றார் ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார். இதைக் கேட்டதும் ஸ்ரீமதி லக்ஷ்மிபதி அவர்களுக்கு 'ஷாக்' ஏற்பட்டு விட்டது போலும்! அல்லோபதி, ஹோமியோபதி, லக்ஷ்மிபதி ஆகிய மூன்று வைத்திய முறைகளும் ஸ்ரீமதி லக்ஷ்மிபதி அம்மையாரைக் குணப்படுத்த முடியவில்லை!

காத்திருந்து காத்திருந்து பார்த்துவிட்டு ஸ்ரீ சின்னசாமி ரெட்டியார் "இந்தக் காரியத்துக்குச் சர்க்காரை நம்பிப் பயனில்லை" என்ற முடிவுக்கு வந்தார். அவருடைய பெருமதிப்புக்குரியவரான ஓமந்தூர் ரெட்டியார் பிரதம மந்திரியாயிருந்த போதுங்கூடக் காரியம் நடக்கவில்லை என்றால், அப்புறம் காத்திருந்து என்ன பயன்! எனவே, பொது மக்களிடம் நன்கொடை வசூலித்து ஆஸ்பத்திரி கட்டி விடுவது என்று நிர்மானித்தார். மொத்தம் 191 நன்கொடையாளரிடம் ரூ. 43,000 வசூல் செய்தார். நவீன முறை கிராம ஆஸ்பத்திரிக்கு வேண்டிய கட்டிடங்களையும் கட்டி முடித்தார். "கட்டிடங்கள் தயார்; இனி மேலாவது சர்க்கார் முன் வந்து கிராம ஆஸ்பத்திரி நடத்துங்கள்!" என்றார். சர்க்காரும் அதற்கு இணங்கினார்கள். ஸ்ரீ சின்னசாமி ரெட்டியாரின் கனவு நினைவாகும் காலம் வரவே, அவருடைய உற்சாகம் எல்லை கடந்ததாயிற்று. ஆஸ்பத்திரி திறப்பு விழாவை அமோகமாக நடத்துவதென்று நிர்மானித்தார்.

திறப்பு விழாவுக்காகச் சென்னையிலிருந்து பல பிரமுகர்களை ஏககாலத்தில் அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்தார். ஒருவருக்குத் தெரியாமல் இன்னொருவரிடம் பேசி ஏற்பாடு செய்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. திறப்பு விழாவுக்கு அழைப்பு இதழைப் பார்த்தால், திறப்பு விழா ஒன்று அல்ல, பல திறப்பு விழாக்கள் என்று தெரியவந்தன. முழு ஆஸ்பத்திரியையும் ராஜாஜி திறந்து வைத்தார். அதில் ஒவ்வொரு பகுதியை கனம் நிதி மந்திரி சுப்பிரமணியம், ஸ்ரீ பக்தவத்ஸலம், பார்லிமெண்டரி காரியதரிசி ஸ்ரீ ராஜாராம் நாயுடு, சென்னை சர்க்காரின் வைத்திய இலாகா டைரக்டர் டாக்டர் அருணாசலம் ஆகியவர்கள் திறந்து வைத்தார்கள். யார் யார் எது எதைத் திறந்து வைத்தார்கள் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள முடியவில்லை. இந்தச் சிரமம் விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ காமராஜ் அவர்களுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். ஸ்ரீ காமராஜ் எப்போதுமே பேச்சில் அதிக நம்பிக்கை இல்லாதவர். சுருக்கமாகச் சில




வித்வான்:—ஏண்டாப்பா! நீ என் சிஷ்யன் என்று ஊரெல்லாம் சொல்லிக் கொண்டு திரிகிறாய். என்னிடம் மட்டும் சொல்லவே இல்லையே!

இளம் வித்வான்:—உங்களை முன்னே பின்னே தெரியாமல் உங்களோடு பேசுவதற்குக் கூச்சமாயிருந்தது. அதனால்தான் சொல்ல வில்லை!

வாக்கியங்களில் மூன்றுரை சொல்லிவிட்டு "நான் சொல்ல வேண்டியது அவ்வளவுதான். இனிமேல் அவரவர்கள் திறக்க வேண்டியதைத் திறந்து வைக்கலாம்!" என்று கூறி அமர்ந்தார்.

அவ்வாறே ஸ்ரீ சி. சுப்பிரமணியம், ஸ்ரீ பக்த வத்ஸலம், ஸ்ரீ ராஜாராம் நாயுடு, டாக்டர் அருணாசலம் முதலியவர்கள் அவரவர்கள் திறந்து வைக்க வேண்டியதைத் திறந்து வைத்துப் பேச வேண்டியதைப் பேசினார்கள்.

• • •

டாக்டர் அருணாசலம் அவர்கள் எதைத் திறந்து வைத்தார் என்பது மட்டும் எனக்கு நினைவிருக்கிறது. ஆஸ்பத்திரி காம்பவுண்டில் டாக்டர் குடியிருப்பதற்காக ஏற்பட்ட ஜாகையை அவர் திறந்து வைத்தார். அதைக் குறித்து ராஜாஜி அவர்கள் தமது முடிவுரைப் பிரசங்கத்தில் குறிப்பிட்டார்.

கிராமங்களில் வைத்திய வசதி அளிப்பதற்கு இப்போது முக்கிய முட்டுக் கட்டையாயிருப்பது என்ன என்பதைப் பற்றி ராஜாஜி தமது பேச்சில் விவரமாகக் கூறினார்.

வைத்திய கலாசாலைகளில் படித்துப் பட்டம் பெற்ற டாக்டர்கள் கிராமங்களுக்குப் போக மறுப்பதுதான் அந்தப் பெரிய முட்டுக்கட்டை.

தற்போது வைத்திய கலாசாலைகளில் ஐந்து வருஷப் படிப்பு அளிக்கப்படுகிறது. ஆனால் பெரும்பாலான மாணவர்கள் ஐந்து வருஷத்தில் தேர்ச்சிபெற்று வெளி வருவதில்லை. சாதாரணமாக ஏழு வருஷங்கள் ஆகின்றன. சில மாணவர்கள் பத்து வருஷங் கழித்துத்தான் வெளி வருகிறார்கள். இதற்குள் குறைந்த பட்சம் பத்தாயிரம் ரூபாய் செலவுசெய்து விடுகிறார்கள். இவ்வளவு காலமும் பணமும் செலவழித்துப் பட்டம் பெற்ற டாக்டர்களைக் கிராமங்களுக்குப் போகச் சொன்னால், போகிறார்களா! கிராமங்களில் வருமானம் இல்லை; குடியிருப்பு வசதி இல்லை; தாங்கள் பெற்ற பயிற்சியைப் பயன்படுத்துவதற்குச் சாதனங்களும் இல்லை. ஆகையால் கிராமங்களுக்கு டாக்டர்களை அனுப்பும் திட்டம் வெகு காலமாகப் பேச்சளவிலேயே இருந்து வருகிறது. பட்டணங்களில் போர்டைத் தொங்க விட்டுக் கொண்டு 'பிராக்டிஸ்' ஆரம்பித்தால், இன்றைக்கு இல்லாவிட்டால் சில வருஷங் கழித்தாவது பிரபலம் அடைந்து நிறைய வருமானமும் அடையலாம் என்ற நம்பிக்கை இருக்கிறது. கிராமங்களுக்குப் போகிறவர்களுக்கு அந்த நம்பிக்கையும் கிடையாது.

இந்த நிலையை முன்னிட்டுச் சில காலத்துக்கு முன்பு ராஜாஜி ஒரு யோசனை கூறினார். "மூன்று வருஷக் குறுகிய கால வைத்தியப் படிப்பு முறை ஏற்படுத்தலாம். இதன் மூலம் சுமாராகத் தேர்ச்சி பெற்ற டாக்டர்கள் பலர் வருவார்கள். இவர்கள் கிராமங்களுக்குப் போக இவ்வளவு தயங்க மாட்டார்கள்" என்று சொன்னார்.

இதை வைத்தியத் தொழில் தலைவர்களாகிய டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் ஆகியவர்கள் மூர்த்தண்யமாக எதிர்த்து வருகிறார்கள்.

இப்போதுள்ள வைத்திய கலாசாலைகளில் அதிக மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளவும், 'ஷிப்ட்' முறையை ஏற்படுத்தவும் மறுப்பவர்கள், மூன்று வருஷத்தில் ஒருவனை 'டாக்டர் ஆக்கி அனுப்பி விட இலேசில் சம்மதிப்பார்களா!

"டாக்டர் என்றால், அந்தத் தொழிலில் பூரணப் பயிற்சியும் பெற்றவராகவே இருக்க வேண்டும். ஐந்து வருஷம் முதல் பத்து வருஷம் வரையில் மெடிகல் காலேஜில் படித்திருக்க வேண்டும். அப்படிப்பட்டவர்களுக்குத்தான் டாக்டர் பட்டம் கொடுப்போம். அரைகுறைப் பயிற்சி ஆபத்தாக முடியும்" என்று சொல்கிறார்கள். இதில் ஓரளவு உண்மை உண்டு என்பதையும் மறுக்க முடியாது.

"அப்படிப் பூரணமாகப் படித்துப் பட்டம் பெற்ற டாக்டர்கள் கிராமங்களுக்குப் போக மாட்டோம் என்கிறார்களே! எல்லாரும் பட்டணங்களிலேயே போர்டை மாட்டுகிறார்களே! கிராமங்களில் வாழும் கோடிக் கணக்கான ஜனங்களுக்கு வைத்திய வசதியே இல்லாமற் போகிறதே!" என்று கேட்டால், "அதற்கு நாங்கள் என்ன செய்வோம்!" என்று வைத்தியத் தொழில் தலைவர்கள் கையை விரிக்கிறார்கள்.

"ஐந்து வருஷப் பயிற்சி பெற்ற டாக்டர்கள் எல்லாருமே டாக்டர் ரங்காச்சாரிகளாகவும் டாக்டர் குருசாமி முதலியார்களாகவும் இருந்து விடுகிறார்களா! அவர்களிலும் சுமாரான டாக்டர்கள் இருக்கத்தானே இருக்கிறார்கள்! மூன்று வருஷப் பயிற்சி பெற்ற டாக்டர்களை கிராமங்களுக்கு அனுப்பினால், அவர்கள் ஏதோ ஜுரம் தலைவலி, கண்வலி முதலிய சாதாரண நோய்களுக்குச் சிகிச்சை செய்யட்டுமே! சிக்கலான 'கேஸ்'களைப் பட்டணங்களில் பெரிய டாக்டர்களுக்கு அனுப்பி வைக்கட்டுமே! வைத்திய வசதியே யில்லாமல் சாவதைக் காட்டிலும், மூன்று வருஷ டாக்டர்களால் சிகிச்சை பெறுவது நல்லதல்லவா!" என்று ராஜாஜி கேட்கிறார்.

இதற்கு வைத்தியத் தொழில் தலைவர்கள் "யார் செத்தாலும் சரி, யார் பிழைத்தாலும் சரி வைத்தியத் தொழிலின் தரத்தைக் குறையவிட மாட்டோம்" என்று பிடிவாதம் பிடிக்கிறார்கள்.

இந்த முக்கியமான விவாதத்தைக் குறித்து ராஜாஜி தமது பிரசங்கத்தில் விவரமாகக் கூறி விட்டு, "இந்தப் பிரச்னைக்கு என்னுலேகூட இன்னும் வழி கண்டு பிடிக்க முடியவில்லை. ஆயினும் ஏதாவது ஒரு வழி கண்டு பிடிக்க வேண்டும் என்று இன்னமும் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருக்கிறேன்!" என்று தெரிவித்தார்.

அப்போது தான் "குடியிருக்க நல்ல ஜாகை இருக்கிறது என்று சொல்லி ஆசைகாட்டி ஒரு நல்ல டாக்டரை இங்கே டாக்டர் அருணாசலம் அனுப்பி வைக்கட்டும்" என்று கூறினார்.

இதற்கிடையில் என் அருகில் இருந்த நண்பர் "போகட்டும்; இந்த ஒரு கஷ்டமான பிரச்னையாவது இன்னும் தீராமல் இருக்கிறதே; இது தீராமல் நீடிக்கும் வரையில் ராஜாஜியும் முதல் மந்திரியாக இருந்து வருவாரல்லவா!" என்று கூறிச் சந்தோஷப் பட்டார்.

எனக்கு அத்தகைய நம்பிக்கையும் இல்லை அதைப்பற்றிய சந்தோஷமும் இல்லை. முதிர்ந்த பிராயத்தில் ராஜாஜி எதற்காக இவ்வளவு தொந்திரவுக்கு ஆளாக வேண்டும் என்ற எண்ணந்தான் மிகுந்திருந்தது. அதைப்பற்றி நண்பருடன் விவாதிப்பதற்கு அப்போது நேரம் இருக்கவில்லை. அங்கே கூடியிருந்த சுமார் பதினாயிரம் ஜனங்களின் மலர்ந்த முகங்களைப் பார்த்தபோது, அவர்கள் எல்லாரும் மேற்கூறிய நண்பரின் கருத்தையே

எடுத்துக் கொள்வார்கள் என்று தோன்றியது. ஆகவே, விவாதிப்பதில் என்ன பயன்!

* * *

மிக உயர்தரமாக நடந்த சிறுவந்தாடு திறப்பு விழா வைபவத்தில் எல்லாவற்றிலும் உயர்ந்த திறப்பு விழாவை நடத்தும் பேறு எனக்குக் கிடைத்தது! ஓமந்தூர் ரெட்டியார் அவர்கள் உயர்ந்த பண்பாடுகள் வாய்ந்த பெரியார். அவருடைய உருவப்படம் மிக உயர்தரமாகப் புன்னகை மலர்ந்த முகத்துடன் தீட்டப்பட்டிருந்தது. அந்தப் படத்தைச் சுவரில் மிக உயரமான இடத்தில் மாட்டியிருந்தார்கள்.

நாற்காலிமேல் நாற்காலி போட்டு அதன்பேரில் ஏறி நின்று கொண்டு ஓமந்தூர் ஸ்ரீ ராமசாமி ரெட்டியாரின் உருவப் படத்தை நான் திறந்து வைக்க நேர்ந்தது! இதை "உயர்ந்த திறப்பு விழா" என்று மேலே நான் குறிப்பிட்டது நியாயமே அல்லவா!

* * *

சிறுவந்தாடு கிராமவாசிகள் ஓமந்தூரார் ஆஸ்பத்திரி விழாவை மாகாண முக்கியமுடைய திருவிழாவாக நடத்தினார்கள். ஊர் அலங்காரம், பந்தல், மேடை, மேளதாள வரவேற்புகள் எல்லாம் பிரமாதமாக இருந்தன. தென்னாற்காடு ஜில்லாவைச் சேர்ந்த பிரமுகர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ கோவிந்தசாமிப் படையாட்சியார், ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தலைவர் ஸ்ரீ வேங்கடகிருஷ்ண ரெட்டியார், ஜில்லா கலெக்டர், ஜில்லா போலீஸ் தலைவர், ஜில்லா வைத்திய அதிகாரி முதலிய பலரும் விஜயம் செய்திருந்தார்கள். வெளியூர்களிலிருந்து வந்திருந்த சுமார் மூவாயிரம் விருந்தாளிகளுக்கு மத்தியான போஜனத்துக்கு ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. விருந்தின் மேன்மையையும், விருந்து பரிமாறப்பட்ட பந்தாவையும் வர்ணிப்பதற்குக் குறைந்த பட்சம் அறுபத்து நாலு கரங்களும் அத்தனை பேனாக்களும் வேண்டும்! அச்சடித்துக் கொடுத்த காகிதத்தில் அறுபத்து நாலு வகை உணவுப் பதார்த்தங்களின் ஜாபிதாவைப் பார்த்து விட்டுத் திணறிப் போனேன்! சாப்பிட்டு முடிந்ததும் ஓமந்தூரார் ஆஸ்பத்திரியிலேயே படுத்துவிட வேண்டியது தான் என்று எண்ணிக் கொண்டேன். ஆனால் பரிமாறப்பட்ட இலையைப் பார்த்ததும் சிறிது தைரியம் உண்டாயிற்று. ஹோமியோபதி வைத்திய முறைப்படி மிகச் சிறிய அளவில் பண்டங்கள் பரிமாறப்பட்டிருந்தன. ஏழு வகைப் பச்சடிகளில் ஒவ்வொன்றும் அரை ஸ்பூனுக்கு மேலிராது. இது போலவே மற்றவையும். ஆனால் பரிமாறுகிறவர்கள் அடிக்கடி குறுக்கும் நெடுக்குமாக வந்து வேண்டுகிறவர்களுக்கு வேண்டிய பண்டங்களை வேண்டிய அளவு பரிமாறிவிட்டுப் போனார்கள்.

தமிழகத்தின் விருந்தோம்பல் பண்பாட்டுக்கு உகந்த முறையில் சிறுவந்தாடு கிராமவாசிகள் இந்த அறுபத்துநாலு வகை உண்டி விருந்தை அளித்தார்கள். அந்தப் பண்பாட்டைப் பாராட்ட வேண்டியதுதான். சில நாளைக்கு முன்பு பெய்த மழையினால் சிறுவந்தாடு கிராமமும் சுற்றுப்புறங்களும் வளங் கொழித்து விளங்குவதும் அந்தக் கிராம வாசிகளின் விருந்தோம்பல் உற்சாகத்துக்குக் காரணமாயிருக்கலாம். ஆனால் இது போன்ற விழாக்கள் நடத்தும் மற்றக் கிராமவாசிகள் விருந்து அளிப்பதில் சிறுவந்தாடு கிராமத்தைப் பின்பற்ற வேண்டியதில்லை. அறுபத்துநாலு வகைகளில் அறுபதை எடுத்துவிட்டு, நாலை மட்டும் வைத்துக் கொண்டால் போதுமானது.

* * *

சென்ற இதழில் சிறுவந்தாடு திருவிழாப் படங்கள் "கிராமக் கல்யாணம்" என்ற தலைப்புடன் பிரசுரிக்கப் பட்டிருந்தன. கிராமங்களின் முன்னேற்ற இயக்கத்துக்குக் "கிராம கலியாண" இயக்கம் என்று சில நாளைக்கு முன்பு ராஜாஜி பெயர் சூட்டினார். "கலியாணம்" என்ற சொல் திருமணச் சடங்கை மட்டும் குறிப்பதன்று. எல்லாவித நலங்களையும் மங்களங்களையும் குறிப்பிடுவது. பழைய காலத்து நாடகங்களில் முனிவர்களுக்கு அரசர்கள் வணக்கம் செலுத்தும் போது முனிவர்கள் "கல்யாண்" "கல்யாண்" என்று ஆசி கூறுவது வழக்கம். "எல்லாவித சுபங்களும் உண்டாகட்டும்" என்று பொருள்.

சிறுவந்தாடு கிராமத்தில் நடந்த ஓமந்தூரார் ஆஸ்பத்திரித் திறப்பு விழாவைத் தமிழ்நாட்டில் "கிராம கலியாண" இயக்கத்தின் ஆரம்ப விழாவென்று வைத்துக் கொள்ளலாம். தமிழ்நாட்டுக் கிராமங்கள் இன்னும் சில ஆண்டுகளுக்குள் எல்லாத் துறைகளிலும் முன்னேறி, நாட்டுப்புறத்தின் எளிய தூய வாழ்க்கையும் நகரங்களின் வசதிகளும் சேர்ந்து விளங்கப் போவதற்குச் சிறுவந்தாடு கிராமம் வழி காட்டியாகத் திகழட்டும்.

# அதிர்ஷ்டக் குழந்தை

## விஜயம்

### 3. பூலோக சுவர்க்கம்

அந்தப் பெட்டி மறைகிற வரையில் கரையிலேயே நின்று பார்த்துக் கொண்டிருந்து விட்டு அரசனும் மந்திரியும் தங்கள் தங்கள் குதிரையில் ஏறிக்கொண்டு தலைநகரத்தை நோக்கி வேகமாகச் செலுத்தினர். குதிரைகளும் அவர்களுடைய அவசரத்தை உணர்ந்தது போல் நாலு கால் பாய்ச்சலில் பறந்தன.

மீண்டும் அந்த வனப் பிரதேசம் அமைதி நிரம்பியது. ஆற்று வெள்ளத்தில் வேகமாகப் போய்க் கொண்டிருந்த மரப் பெட்டி கவிழ்ந்து விடாமல் அழகாக மிதந்து கொண்டே சென்றது.

வெகு தூரம் நதியில் பிரயாணம் செய்த பெட்டி அலுப்படைந்தது போல் ஒரு மரத்தில் சிக்கிக்கொண்டு நின்றது. வேரோடு பறிக்கப்பட்டிருந்த அந்த மரம் அந்த ஆற்று வெள்ளத்துக்குக் குறுக்கே பாலம் அமைத்ததுபோல் விழுந்திருந்தது. அங்கே ஆழம் அதிகம் இல்லாமல் மணல் மேடு இட்டிருந்தது.

ஆற்றங்கரை யோரமாகப் பேச்சுக் குரல் கேட்டதிலிருந்து சமீபத்தில் ஊர் இருக்கிறது என்று தெரிந்தது. பக்கத்தில் படித்துறை இருந்தது. படித் துறையில் சில பெண்மணிகள் இறங்கிக் குடத்தில் ஜலம் எடுத்துக்கொண்டிருந்தனர்.

அப்பொழுது உபாத்தியாயர் நித்தியானந்தம் படித்துறையில் இறங்கி, முகம், கை, கால் கழுவிக் கொண்டு கரையேறினார். மாலை வேளை மஞ்சள் வெய்யிலில் அந்தப் பெட்டி அவர் கண்ணில் பட்டது. உடனே அவர் பரபரப்புடன் சென்று மரத்தின் வழியே நடந்து போய்ப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்து திறந்தார்.

அவர் கண்களை அவராலேயே நம்ப முடியவில்லை. கண்களை மூடி மூடித் திறந்தார்; தம் உடம்பை ஒருமுறை கிள்ளிப் பார்த்துக் கொண்டு தாம் தூங்கவில்லை, கனவு காணவில்லை என்பதை நிச்சயமாய்த் தெரிந்து கொண்டார்.

நித்தியானந்தம் செய்த சேஷ்டைகளையெல்லாம் பார்த்த குழந்தை தன் அழகிய கன்னங்கள் குழியச் சிரித்தான்.

குழந்தையின் மோகனப் புன்னகையைக் கண்ட நித்தியானந்தம் இந்த உலகத்தையே மறந்து விட்டார். வெகு நாட்களாகக் குழந்தை இல்லாமல் ஏங்கிக்கொண்டிருந்த அவருக்கு ஆனந்தம் தாங்கவில்லை.

அதுவரையில் ஆற்றங்கரைக்கு யாரும் வரவில்லை. நித்தியானந்தம் குழந்தையைக் கண்டதை யாரும் பார்க்கவுமில்லை. ஆற்றில் ஜலம் மொண்டு கொண்டிருந்த இரண்டொரு பெண்மணிகளும் போய் விட்டனர்.

உபாத்தியாயர் நித்தியானந்தம் பெட்டியுடன் குழந்தையை எடுத்துக் கொண்டு ஆற்றங்கரைக்கு மிகவும் சமீபமாக அமைந்திருந்த தம்முடைய வீட்டுக்குச் சென்றார்.

அழகிய மரப் பெட்டியும் கையுமாக உள்ளே வந்த நித்தியானந்தத்தைப் பார்த்து அவர் மனைவி அதிசயத்துடன் நின்றாள். பெட்டியைக் கீழே வைத்தார் நித்தியானந்தம்.

"பெட்டிக்குள் என்ன இருக்கிறது?" என்று மிகுந்த வியப்போடு கேட்டாள் அவருடைய மனைவி அம்புஜம்.

நித்தியானந்தம் அவனை விழுங்கி விடுகிற மாதிரி பார்த்தார்.

"அம்புஜம், பெட்டியைத் திறந்து அதற்குள் என்ன இருக்கிறது என்று நீயே பாரு!" என்றார்.

அம்புஜம் அடங்காத ஆர்வத்தோடு அந்தப் பெட்டியைத் திறந்தாள்.

அவ்வளவு தான். ஆச்சரியத்தினால் அம்புஜம் கற்சிலை மாதிரி இடுப்பில் கைவைத்தபடி நின்று விட்டாள்.

பெட்டிக்குள் இருந்த குழந்தை அம்புஜத்தைப் பார்த்துச் சிரித்தான். அவன் சிரிப்பில் குழிந்த கன்னம் அம்புஜத்தைப் பரவசப்படுத்தியது.

"என் கண்ணே, என் ராஜா!" என்று அன்பு ததும்பக் கூப்பிட்டுக் குழந்தையைப் பெட்டியிலிருந்து எடுத்து வாரி அணைத்துக் கொண்டாள்.

ஆனந்த மிகுதியில் அம்புஜத்துக்கு, குழந்தை கிடைத்த விதத்தைப் பற்றியோ, அது எங்கே கிடைத்தது என்பதைப் பற்றியோ ஒன்றும் கேட்கத் தோன்றவில்லை. எத்தனையோ நாட்களாக ஒரு குழந்தைக்காக ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த அவள் தாய் உள்ளம் இன்று பொங்கிப் பூரித்தது. குழந்தையும் அம்புஜத்தினிடம் ஏற்கெனவே பழகிப் போன மாதிரி சிரித்து அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டது.

"இந்தத் தங்கக் கட்டி உங்களுக்கு எங்கே கிடைத்தது?" என்று அம்புஜம் நித்தியானந்தத்தைக் கேட்டாள்.

"அம்புஜம், ரொம்ப அதிசயமான சம்பவம் அது! நான் ஆற்றங்கரைக்குப் போயிருந்தேன் அல்லவா? இந்தப் பெட்டி ஆற்று வெள்ளத்தில் மிதந்து வந்து, ஆற்றுக்குக் குறுக்கே ஒரு பெரிய மரம் விழுந்திருக்கிறது பார், அதன் அருகே சிக்கியபடி நின்றது. என் கண்களில் இந்த அழகான மரப்பெட்டி பட்டதும் அதிசயம் தாங்காமல் மரத்தின் மேல் நடந்து போய்ப் பெட்டியை எடுத்துவந்து திறந்து பார்த்தேன். உடனே வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டேன்!"

"பெட்டியின் மேல் செய்யப்பட்டிருக்கும் வேலைப்பாட்டையும், அதன் உள்ளே விரித்திருக்கும் பீதாம்பரத்தையும் பார்த்தால் இது ராஜா வீட்டுக் குழந்தையோ என்று தோன்றுகிறது! இவ்வளவு அழகான குழந்தையை எப்படிப் பெட்டிக்குள் வைத்து ஆற்று வெள்ளத்தில் விட்டு விடப் பெற்ற மனம் இசைந்தது?" என்றாள் அம்புஜம்.

"அம்புஜம், நாம் அந்தமாதிரி எப்படி ஊகிக்க முடியும்? பெற்றவள் குழந்தையைக் கொல்ல இசைய மாட்டாள். மேலும் குழந்தை நன்றாய் வளர்ந்திருக்கிறது. ஒரு வயது இருக்கும் என்று தோன்றுகிறது. அவளுக்கு வேண்டாதவர்கள் யாரோ செய்த சூழ்ச்சியாயிருக்கலாம்!"

"குழந்தையை அரசாங்கத்தினிடம் ஒப்புவித்துவிட வேண்டுமா?" என்று திகிலுடன் கேட்டாள் அம்புஜம்.

நித்தியானந்தம் சற்று நேரம் யோசித்துவிட்டு "......ஊஹூம், கூடாது, கூடாது! குழந்தையின் நகைகளுக்கு ஆசைப்பட்டுக் கொண்டு, யாராவது திருட்டுப் பயல் இந்தக் கொடிய காரியத்தைச் செய்திருக்கலாம். இந்தக் குழந்தையை அரசாங்கத்தினிடம் ஒப்புவித்து, உண்மையைச் சொன்னோமானால் நாமே குற்றவாளியாகத் தோன்றும். அம்புஜம், நாம் பரம ஏழை. நம் ஏழைமை ஒன்றே போதும், நம்மீது குற்றத்தை நிச்சயமாய்ச் சுமத்த! நாம் நிரபராதிகள் என்று அரசாங்க உத்தியோகஸ்தர்கள் நம்ப வேண்டுமே......!"

"......நாம் உண்மையை எடுத்துச் சொன்னால் நாம் குற்றமற்றவர்கள் என்று அவர்கள் நம்ப மாட்டார்களா?"

"அம்புஜம், உனக்கு உலகம் தெரியாது. நான் இந்தக் குழந்தையைக் கண்டெடுத்த விதத்தைக் கூறி இது முற்றிலும் உண்மை என்று சத்தியம் செய்தால்கூட அவர்கள்



நம்புவார்களா? இந்தக் குழந்தை ஒரு நகையும் இல்லாமல் பிறந்த மேனியாயிருக்கிறது. நகைகளை நாம் கழற்றிக் கொண்டு இந்தக் கதையைக் கட்டி விட்டதாகச் சொல்லலாம் அல்லவா? மேலும் குழந்தை இருந்த பெட்டி, அதனுள் விரிக்கப்பட்டிருக்கும் பீதாம்பரம் இவைகளை யெல்லாம் பார்க்கும்போது இந்தக் குழந்தை அரண்மனையைச் சேர்ந்ததோ என்று என்னவெல்லாமோ நினைக்கத் தோன்றுகிறது......!''

"இந்த ஊர் ராஜாவுக்குத்தான் குழந்தையே யில்லை. இரண்டு ராணிகளும் என்னென்னவோ விரதம் இருக்கிறார்கள்; பூஜை செய்கிறார்கள். ஒரு வேளை அரண்மனையில் ஏதாவது......!''

"......உஸ்! அரசனைப் பற்றியும் அரண்மனையைப் பற்றியும் வாயைத் திறக்காதே! காலம் கெட்டுக் கிடக்கிறது!'' என்று கூறி நித்தியானந்தம் அம்புஜத்தின் வாயைப் பொத்தினார்.

"இல்லை. இந்தக் குழந்தையை நாமே வளர்த்தாலென்ன? இந்தப் பெட்டியில் ஆண்டவன் நமக்கு அளித்த குழந்தை இதுதான். இல்லாவிட்டால் இந்தக் காட்டாற்று வெள்ளத்தில் மிதந்து வந்த இந்தப் பெட்டி கவிழ்ந்து விடாமல் ஒழுங்காக வந்து நம்ம ஊர்ப் படித்துறைக்குப் பக்கத்தில் தங்குமா? இந்தப் பெட்டியையும் பீதாம்பரத்தையும் நம்முடைய பூஜை அறையில் பத்திரமாக வை. நாமே இந்தக் குழந்தையை வளர்ப்போம்!'' என்றார் நித்தியானந்தம்.

அம்புஜம் அடைந்த ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. "குழந்தையைப் பார்த்ததும் எனக்கு என்னையும் அறியாமல் ஒரு ஆசை விழுந்து விட்டது. ஆனால் நீங்கள் என்ன சொல்லுவீர்களோ என்று நினைத்துத்தான் கேட்டேன்!'' என்றாள்.

இந்தச் சமயம் குழந்தை கைகளையும் கால்களையும் உதைத்துக் கொண்டு 'வீல்' என்று கத்த ஆரம்பித்தது.

அம்புஜம் உடனே ஓடி, சமையல் அறையிலிருந்து கொஞ்சம் பசும்பாலை எடுத்துக் கொண்டு வந்து குழந்தைக்கு

தோட்டத் தொழிலாளர்களுக்குப் பிரஜாவுரிமை யளிப்பது சென்ற சில வாரங்களுக்கிடையில் மிகவும் கடுமையாக்கப் பட்டிருக்கிறது.

தோட்டத் தொழிலாளர் அடிக்கடி தோட்டம் விட்டுத் தோட்டம் மாறியுள்ளபடியினால் அவர்கள் இலங்கையில் தொடர்ந்து வசித்ததை நிரூபிக்க முன்பு வேலை செய்துள்ள தோட்ட முதலாளிகளிடமிருந்து வாங்கிய சர்டிபிகேட்டுகளைக் காண்பித்தால் போதாதென்றும், அந்தத் தோட்ட முதலாளிகள் கணக்குப் புத்தகங்களோடு நேரில் ஆஜராகி, சாட்சியம் கொடுக்க வேண்டுமென்றும் கட்டாயப் படுத்துகிறார்கள். விசாரணை தினத்தன்று விசாரணை நடக்குமிடத்துக்குச் சம்மன் அனுப்பித் தோட்ட முதலாளிமார்களை அழைத்து வருவது லேசான காரியமா! அவர்களுக்குப் 'படி' கட்டி, கார் அமர்த்திக் கொடுத்துச் சாப்பாட்டு வசதிகளெல்லாம் செய்து கொடுக்க ஒரு தொழிலாளிக்குச் சுமார் ரூ. 200 செலவாகிறதாம். இவ்வாறு வருந்தியழைத்துக் கொண்டு வரப்படும் தோட்ட முதலாளிமார்கள் ஒரே நேரத்தில் பல தொழிலாளர்களின் சார்பாகச் சாட்சியமளிக்க முடிவதுமில்லை. நாள் ஒன்றுக்கு இரண்டு மூன்று வழக்குகள் மட்டுமே விசாரிக்கப்படுவதினால் தொழிலாளருக்கும் அவர்களது ஸ்தாபனமாகிய இலங்கை இந்திய காங்கிரசுக்கும் தாங்க முடியாத செலவேற்படுகிறது. இதைப் பார்த்தால் பிரஜாவுரிமைக்கு மனுப் போட்டவர்களிலே 100க்கு 5 பேர்கள் கூடப் பிரஜா உரிமை பெறுவது அசாத்தியமென்று இ. இ. கா. கௌரவக் கூட்டுக் காரியதரிசி ஸ்ரீ கே. ஜி. எஸ். நாயர் கூறுகிறார்.



மனைவி (சலிப்புடன்):—எனக்கு வர வர இந்த நகைகள், புடவைகள் மேல் இருக்கிற ஆசையே விட்டுப் போய்விடுகிறது.

கணவன் (ஆச்சரியத்துடன்):—என்ன இது! நிஜந்தானா?

மனைவி:—பின்னே பொய்யா சொல்கிறேன்? எத்தனை நாளைக்குத்தான் இந்தப் பழைய நகைகளையும் புடவைகளையும் கட்டிக் கொண்டு அழுகிறது?

ஜனவரிமீ 30உ

இலங்கை இந்தியர்கள் மீது இதுவரையில் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளெல்லாம் அற்பமாகத் தோன்றச் செய்யக் கூடிய ஒரு பிரம்மாஸ்திரத்தை இப்பொழுது அரசாங்கம் தொடுத்திருக்கிறது. இதன் எதிரொலிகள் எவ்வளவு பாரதூரமாயிருக்குமென்பதை எண்ணி இலங்கை இந்தியச் சமூகம் கதிகலங்கி நிற்கிறது.

கள்ளத் தோணிகளில் இலங்கைக்கு வந்தவர்களைக் கண்டு பிடித்துத் தண்டித்து நாடு கடத்துவதற்காக பிரதம மந்திரி ஸ்ரீ டட்லி சேனநாயகா இமிகிரேஷன் சட்டத்துக்கு ஒரு திருத்த மசோதாவைப் பார்லிமெண்டில் சமர்ப்பித்திருக்கிறார். கள்ளத் தோணியில் இலங்கைக்கு வந்தவர்களைக் கண்டு பிடித்துத் தண்டிப்பதையோ அல்லது நாடு கடத்துவதையோ யாரும் ஆட்சேபிக்கவில்லை. இதற்கு மாறாக, சட்ட விரோதக் குடியேற்றத்தைத் தடுப்பதில் இலங்கை அரசாங்கத்துடன் பரிபூரணமாக ஒத்துழைக்க இலங்கை இந்திய காங்கிரசும் இந்திய அரசாங்கமும் எப்பொழுதும் தயாராயிருக்கின்றன. கள்ளத் தோணிக்காரர்களைத் தண்டிப்பதாகச் சொல்லிக் கொண்டு இலங்கையில் பல ஆண்டுகளாக வசித்து வருவோர்களை இம்சிக்கப் போலீசுக்கு விரிவான அதிகாரங்கள் அளிக்கப்படுவதும் நினைத்தவர்களை நினைத்த மாத்திரத்தில் கைது செய்யக் கூடிய நடவடிக்கைகளைக் கையாள அனுமதிப்பதும் கடுமையாகக் கண்டிக்கப்பட வேண்டியவை.

"ஒரு இந்தியரை இலங்கையில் சட்ட விரோதமாகக் குடியேறியவரென்று ஒரு போலீஸ் உதவி சூப்பிரண்டெண்ட் தீர்மானித்து சர்டிபை செய்வாரானால் அந்த இந்தியர் தாம் நிரபராதியென்பதைக் கோர்ட்டார் முன்னிலையில் நிரூபணம் செய்யும் வரையில் குற்றவாளியாகவே மதிக்கப்படுவார்" என்று பிரதமர் கொண்டு வந்துள்ள திருத்த மசோதாவில் ஒரு ஷரத்து கூறுகிறது. இதன்படி போலீஸார் இந்தியர்களில் யாரையும் சட்ட விரோதமாகக் குடியேறியவரென்று குற்றஞ் சாட்டிக் கைது செய்யலாம். கைது செய்தபின் குற்றச் சாட்டை ருசுப்படுத்த வேண்டிய பொறுப்பு போலீஸாருக்கு இல்லை. நிரபராதிகளென்பதை நிரூபணம் செய்யும் பொறுப்பு கைது செய்யப்படும் இந்தியர்கள்மீது சுமத்தப்படுகிறது.

பயங்கரமான படுகொலை செய்தவர்களைக்கூட அவர்களைக் குற்றவாளிகளெனக் கோர்ட்டார் தீர்மானித்துத் தீர்ப்புக் கூறும் வரையில் 'எதிரி' என்று சொல்லலாமே தவிர குற்றவாளியென்று கூற யாருக்கும் உரிமையில்லை. கொலை வழக்குகளிலும் குற்றச் சாட்டை ருசுப்படுத்த வேண்டிய பொறுப்பும் கடமையும் குற்றஞ் சாட்டும் பிராசிகூஷன் தரப்பைச் சேர்ந்தது. விசாரணையில் ஒரு அற்ப சந்தேகம் ஏற்பட்டாலும் அதன் பலனை எதிரிக்கு அளித்து எதிரியை விடுதலை செய்ய வேண்டுமென்பது சட்டம். நீதியின் இந்த மேலான அடிப்படையை இந்தியர்கள் விஷயத்தில் மாத்திரம் மாற்றுவானேன்!

சொந்த சண்டை சச்சரவுகளை முன்னிட்டு ஒரு இந்தியரைக் கள்ளத் தோணியில் வந்தவரென்று யாராவது ஒரு மொட்டைக் கடிதம் எழுதிப் போட்டு விட்டால் போதும். உடனே அந்த நபரைப் போலீஸார் கைது செய்யலாம். பெரும் பணச் செலவு செய்து வக்கீல்களை அமர்த்தி, கோர்ட்டில் வழக்காடி, குற்றவாளியல்லவென்பதை நிரூபிக்கும் வரையில் அவர் குற்றவாளியாகவே கருதப்படுவாரென்று புதிய சட்டம் கூறுகிறது. ஏழை எளிய இந்தியர்களில் எவ்வளவு பேர்களினால் பலவிதமான தஸ்தாவேஜுகளையும் காட்டி இலங்கையில் நீடித்து வசிப்பதை நிரூபணம் செய்ய முடியும்! எவ்வளவு பேர்களினால் பெரும் பணச் செலவு செய்து வழக்காட முடியும்! இந்தியர்களைப் பலாத்காரமாகப் பிடித்து நாடு கடத்த ஒரு பிரம்மாஸ்திரத்தை அரசாங்கம் தொடுத்துள்ளதைப் போலிருக்கிறது புதிய மசோதாவின் விபரீதமான ஷரத்துகள்.



ஸ்ரீ கே. வி. பி. ராவ்



சர்தார் சூச்சா சிங் ஆனந்த்

பயர்ஸ்டோன் டயர் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ கே. வி. பி. ராவ் தென் பகுதி மானேஜர். சர்தார் சூச்சா சிங் ஆனந்த் வட பகுதி மானேஜர்.

ஸ்ரீ ராவ் மூன்பு மதராஸ் டிஸ்ட்ரிக்ட் மானேஜராக இருந்து தென் பகுதி மானேஜராக பதவி உயர்வு பெற்ருர்.

சர்தார் சூச்சா சிங் ஆனந்த் டெல்லி டிஸ்ட்ரிக்ட் மானேஜராக இருந்து வட பகுதி மானேஜராஞர்.

இவர்கள் இருவரும் சீக்கிரமே யு. எஸ். பயர்ஸ்டோன் ஆபீஸில் உயர்தர பயிற்சிக்காக அமெரிக்காவுக்குச் செல்வார்கள்.




மாணவர்கள் உற்சாகமாக நடவு நடுகின்றனர்.

"உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்!
பழுதுண்டு வேறோர் பணிக்கு."

நெற்களஞ்சியம் என்று போற்றப்பட்டு வரும் தஞ்சை ஜில்லாவில் முக்கியமான ஒரு பெரிய கிராமம் திருக்காட்டுப் பள்ளி. அது பூதலூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வடக்கே ஐந்துமைலில் உள்ளது. ஸ்டேஷனிலிருந்து வரும் வழியில் நான்காவது மைலில் கண்டமங்கலம் கால்வாய்க்கருகே, சர்க்கார் புறம்போக்கு நிலம் சுமார் முப்பது ஏக்கர் தரிசாகவே கிடந்தது. உலகம் தோன்றிய காலத் தொட்டே அது பாழாக இருந்ததோ என்று நினைக்கும்படி இருந்தது. எங்கு பார்த்தாலும் பச்சைக் கம்பளம் விரித்தது போன்று பசுமையான வயல்கள் சூழ்ந்திருக்க இந்த இடத்தில் மட்டும் எங்கு பார்த்தாலும் மேடு, பள்ளம், முட்செடிகள், புதர்கள், மூலைக்கொரு கருவேல் மரம், முடுக்கிற்கொரு பனை மரம் இப்படியாகக் காட்சி அளித்து வந்தது.

ஆறடி உயரம், பரந்த நெற்றி, எடுப்பான தோற்றம். அவருடைய மிடுக்கான நடையே பிடிவாத குணமுடையவர் என்பதைக் காட்டி விடும். அவர்தான் ஸர் பி. எஸ். சிவசாமி ஐயரவர்களால் நிறுவப்பெற்ற ஹைஸ்கூலின் தற்போதைய ஹெட்மாஸ்டர் ஸ்ரீ எஸ். ஆர். பாலசுப்ரமண்ய ஐயர். மேற் கூறிய பாழான நிலம், அது செய்த புண்ணிய வசத்தினால் என்றுதான் சொல்ல வேண்டும், உலாவச் சென்ற அவர் கண்ணில் பட்டு விட்டது. ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்களைப் பராமரிக்கும் ஆற்றல், ஹாஸ்டலிலுள்ள 120 மாணவர்களைக் கண்ணுங் கருத்துமாகப் பாதுகாக்குந் திறமை ஆகியவற்றில் அவர் புகழ் பெற்று விளங்கினார் என்றாலும், படிப்பிற்கு அப்பாற்பட்ட எண்ணமொன்று அவர் மனத்தில் அப்போது பட்டது என்றால், அது எல்லோருக்குமே ஆச்சரியமாகத்தான் இருக்கும். அந்த எண்ணம் "உணவுப் பற்றுக் குறை தாண்டவமாடும் காலத்தில், நாம் இந்த நிலத்தை ஏன் சீர் செய்யக் கூடாது!" என்பதுதான். ஹாஸ்டல் மாணவர்களுக்கு வேண்டிய அளவு உணவு அளிப்பதற்கும், பள்ளிக் கூடத்தில் விவசாயப் பாடம் நடத்துவதற்கும், மற்றைய கிராமத்தாருக்கு விஞ்ஞான முறையில் உழவுத் தொழிலை நடத்திக் காண்பிப்பதற்கும் ஏற்றவாறு இந்த நிலத்தை ஏன் சீர்திருத்தம் செய்யக்கூடாது என்ற எண்ணத்தோடு வீடு திரும்பினார். எண்ணிய நேரம், புண்ணிய காரியத்தைக் கை கூடும் படிச் செய்து விட்டது.



களர் நிலத் திருத்திய ஹெட்மாஸ்டர்

1944ம் வருஷம் நவம்பர் மாதம் 23ம் தேதியன்று நிலத்தை விவசாயப் பாடம் நடத்துவதற்காகத் தரவேண்டுமென்று ஜில்லா கலெக்டருக்கு மனு செய்து கொண்டார். நிலம் கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையோடு பள்ளிக்கூட ஸ்தாபகரின் சம்மதத்தையும் பெற்றார். சுவாமி வரங் கொடுத்தும், பூசாரி வரங் கொடுக்கவில்லையென்பார்களே, அதுபோலவே அப்போதைய அதிகாரிகளோ "யுத்தத்திலிருந்து திரும்பி வரும் சிப்பாய்களுக்காக ரிசர்வ் செய்யப்பட்டிருப்பதால் தற்போது அந்த நிலத்தைத் தர முடியாது" என்று சொல்லி விட்டார்கள். ஆனால் ஸ்ரீமான் ஐயர் கல்வி டைரக்டரவர்களின் சிபார்சைக் கொண்டு "ரெவின்யூ போர்டு"க்கு அப்பீல் செய்து வெற்றி பெற்றார். 23—1—1947ல் உத்தரவும் கிடைத்து விட்டது. அந்த உத்தரவை 1947ம் வருஷம் ஏப்ரல் மாதம் பதின்மூன்றாம் தேதி பெற்றுக் கொண்டார். உடனே விவசாய டைரக்டரின் உதவியால் கிடைத்த விவசாய இலாகாவின் 'புல்டோஸர்' ஆகிய நவீன இயந்திரத்தால்,



வயல்களுக்கு மத்தியில் இருக்கும் இந்தக் குளத்தில் மீன் வளர்க்கிறார்கள்.

களர் நிலம் மேடு பள்ளம் இல்லாமல், பல வயல்களாகப் பிரிக்கப்பட்டன. செப்பனிடும் வேலையே தொடர்ந்து சுமார் ஆறு மாதம் நடைபெற்றது. பிறகு விண்ணுறு எக்ஸிக்யூடிவ் எஞ்சினியருக்கு மேற்படி நிலத்துக்குத் தண்ணீர் வசதி செய்து தருமாறு விண்ணப்பித்தார். கொடுக்கிற தெய்வம், 'கூரையைப் பொத்துக் கொண்டு கொடுக்கும்' என்பது போல அங்கிருந்தும் உடனேயே அனுமதி கிடைத்து விட்டது. 1949ம் வருஷம் மார்ச்சு மாதம், கண்டமங்கலம் கால்வாயிலிருந்து தண்ணீர் வசதி, தனி வாய்க்காலின் மூலம் மேற்படி நிலங்களுக்குச் செய்து தரப்பட்டது.

சென்னை மந்திரிகள் ஸ்ரீ மாதவமேனன், ஸ்ரீ பக்தவத்ஸலம் இவர்களிருவரும் வந்திருந்து இதைத் திறந்து வைத்தார்கள். ஸ்தாபகரின் ஞாபகார்த்தமாக இந்நிலத்திற்குச் "சிவசாமி புரம்" என்ற பெயரும் சூட்டப்பட்டது.

நன்செய் சாகுபடி, புன்செய் சாகுபடி, தோட்டக்கால் சாகுபடி, கோழிப் பண்ணை, மீன் பண்ணை, பால்பண்ணை–இவ்வளவுக்கும் தகுந்தாற்போல் தரிசாகக் கிடந்த நிலம் சீர்திருத்தப் பட்டது. அத்துடன் கோடை காலச் சாகுபடிக்கென்றே நான்கு கிணறுகள் வெட்டப்பட்டன. சுமார் 8000 ரூபாய் செலவில் செப்பனிடப்பட்ட நிலத்தைக் கண்ட பக்கத்துக் கிராமத்தார்கள் நகைக்க ஆரம்பித்தார்கள். 'இவ்வளவு பணத்தையும் இந்தப் பாழும் நிலத்தில் கொட்டி விட்டாரே! பொதுச் சொத்து பாழாகின்றதே! இந்தப் பணத்தைக் கொண்டு புது நிலங்களை வாங்கியிருந்தால் கைமேல் பலன் கிடைக்குமே!' என்றெல்லாம் பலவாறாகப் பேச வாரம்பித்தார்கள். ஆனால் ஸ்ரீ பாலசுப்ரமண்ய ஐயர் இவற்றை யெல்லாம் பொருட்படுத்தவில்லை. மேலும்இவர் 'பயிர்த் தொழில் நிபுணர்' என்ற பட்டம் பெற்றவரல்லர். அத்தொழிலில் அனுபவமும் இல்லாதவர். அங்ஙனமிருந்தும் விவசாய சம்பந்தமான பல நூல்களை வரவழைத்து, இரவும் பகலும் படித்து, களர் நிலங்களை எவ்விதமாகச் சீர்திருத்தம் செய்யலாம் என்பதையறிந்து கொண்டதோடு மட்டுமல்லாமல், பலருடைய யோசனைகளையும், வழிகளையும் கேட்டு அவற்றைப் பயன் படுத்திக் கொண்டார்.

முதல் வருஷமாகையால் பண்ணையில் உரமில்லை. இருந்தாலும் பஞ்சாயத்து போர்டில் இருந்த கம்போஸ்ட் உரத்தையும், அதாவது மாட்டுச் சாணம், குப்பைசாணம் முதலியவைகள் மக்கிய உரம், விற்பனைக்கென்றே வந்த தழை உரம் இவற்றை விலைக்கு வாங்கி இந் நிலத்தில் போட்டார். இங்ஙனம் அதிக உரம் போடப் பட்டுங் கூட, நிலத்தில் நல்ல விளைச்சல் இல்லை. வரப்பு, மீன் வளர்ப்புக் குளம், ரஸ்தா இவற்றிற்காக ஒதுக்கப்பட்ட இடத்தைத் தவிர எஞ்சிய 25 ஏக்கர் நிலத்திலும் மொத்தத்தில் 23 கலம் தான் விளைந்தது. இந்த நிலையில் ஸ்ரீ பாலசுப்பிரமண்ய ஐயரைத் தவிர வேறொருவராக இருந்திருந்தால் இந்த முயற்சியை நிச்சயம் கைவிட்டிருப்பார் என்பது உறுதி. ஆனால் ஸ்ரீ ஐயர் மனம் தளர்ந்ததாகவே காணப்படவில்லை.

உடனே அந்த நிலத்தின் மண்ணை, கோயமுத்தூர் விவசாய ஆராய்ச்சி சாலைக்கு அனுப்பி அதிலிருந்த குறைகளை அறிந்து கொண்டார். "நிலத்தில் அளவுக்கு மிகுதியாக உப்பு இருக்கிறது என்பதும் மண்ணில் குணப சத்து குறை என்பதுந்தான்" ஆராய்ச்சியின் முடிவாகும். உடனே குணப சத்தை எப்படியாவது நிலத்துக்கு ஊட்ட வேண்டும் என்ற ஒரே எண்ணத்தோடு பாடுபட ஆரம்பித்தார்.

சாதாரணமாக, களர் நிலங்களெல்லாம் வடிகால் வசதியில்லாத இடங்களில் தான் தோன்றும். அங்ஙனமுள்ள நிலங்களில் முதலில் வடிகால் ஏற்படுத்திய பிறகு நிலத்தில் தண்ணீரைத் தேங்க வைத்துச் சில மணி நேரங்கழித்து வடிகாலின் வழியாகத் தண்ணீரை அப்புறப்படுத்த வேண்டும். இம்முறையினால் நிலத்திலுள்ள உப்பெல்லாம் தண்ணீரில் கரைந்து வெளியே செல்லும். களர் நிலத்தைச் சீர்திருத்தம் செய்வதில் ஒருவழியாகிய இம்முறை கையாளப்பட்டது.

மேலும் உப்புக் கரைந்த நீர் ஆவியாகப் போகும் போது சிறிதளவு பூமியின் மீதும் படிவதுண்டு.

இங்ஙனம் படியும் உப்பைச் சிலர் வெட்டியும் எடுத்து விடுவர். இந்த முறையும் செய்யப்பட்டது.

மூன்றாவதாக. உப்புகள் பூமியில் அதிகமிருப்பதால்தான், பயிர்கள் வளர வசதியில்லாமற் போய் விடுகிறது. இதை நீக்கச் சுண்ணாம்பை நிலத்தில் சேர்ப்பது மற்றொரு முறையாகும். இம்முறையினால் அநுகூலமான சில இரசாயன மாறுதல்கள் ஏற்படுகின்றன. பிறகு பயிர் ஓரளவு நன்கு வளரும் என்ற ஆராய்ச்சியாளர்களின் முடிவை உணர்ந்து அவ்விதமும் செய்யப்பட்டது.

கடைசியாக, களர் நிலங்களிலுள்ள உப்பையே தின்று வளரும் தன்மையுடைய செடிகளில், கேழ்வரகு, சோளம், மக்காச்சோளம் முக்கியமானவை. ஆகையால் கோடை காலச் சாகுபடிக் கென்று வெட்டப்பட்ட கிணறுகளின் உதவியால், இவை பயிராக்கப்பட்டன.

இதற்கிடையில் பண்ணையின் வழிநடையாகிய ரஸ்தாவின் ஓரங்களில் ஏராளமான 'கிளிரிசீடியா' செடிகள் பயிராக்கப் பட்டன. மேலும் வயல்களிலும், வரப்புகளிலும் சஸ்பேனியா (சீமையகத்தி), தக்கைப்பூண்டு, சணப்பு, போன்ற செடிகளும் பயிராக்கப்பட்டு, அவை வளர்ந்த பிறகு வயலில் போட்டு மிதிக்கப்பட்டன. மேலும் பால்பண்ணையின் மூலம் சுமார் 300 வண்டி தொழு உரமும் கிடைத்தது. சுமார் 300 வண்டி கம்போஸ்ட் உரமும் தயாராகியது. கடுதாசியும், ஹாஸ்டல் மாணவர்கள் சாப்பிட்ட இலையுங்கூடக் கம்போஸ்ட் உரத்திற்குப் பயன்பட்டன.

இத்தகைய முற்போக்கான முயற்சிகளையெல்லாம் கண்ட சிலர் ஹெட்மாஸ்டரிடம் வந்து, "நீங்கள் இம்மாதிரியான களர் நிலத்திற்கெல்லாம் எஸ். ஆர். 26பி, அழல் கொண்டான், பனைமரச் சம்பா போன்ற நெல் வகைகளை உபயோகித்தால் தான் நன்கு வளரும்" என்றார்கள். அதைக் கேட்ட அவர் உடனே அந்த விதைகளையெல்லாம் வரவழைத்தார். ஆனால் இடையில் என்ன நினைத்துக் கொண்டாரோ என்னவோ "ஊருடன் நாமும் ஒத்து வாழவேண்டும்" என்றார். மற்றைய உழவர்கள் எந்த விதையை நன்றாக விளையக்கூடிய நன்செய் நிலத்தில் பயிர் செய்கிறார்களோ, அதே விதையை நாமும் இந்தக் களர் நிலத்தில் விதைத்து மற்றவர்கள் காணும் மகசூலைவிட அதிக விளைச்சலைப் பெற வேண்டும் என்று எண்ணினார். வீண் பகட்டாகச் சொல்லளவில் நின்றுவிடாமல் உடனேயே விவசாய இலாகாவிடமிருந்து கோ 35 (குலை நோய் தாக்காத சிறுமணி) என்ற பொறுக்கு விதையை வரவழைத்து விதைத்தும் விட்டார்.

பகீரதப் பிரயத்தனம் என்று சொல்லுகிறீர்களே, அதனுடைய உண்மை அப்போதுதான் விளங்கிற்று. இத்தகைய உழைப்புக்குப் பிறகு "பண்ணிய பயிரில் புண்ணியம்" தெரிய ஆரம்பித்தது. உழைப்பினால் உறுதியும், விடா முயற்சியால் விளைவும், கிட்டின. பாடுபட்டுத் தேடிய பணத்தைக் கேடுகெட்ட வழியில் செலவிடுகிறாரே என்று சொல்லியவர்களெல்லாம் பிரமித்துப் போனார்கள். 23 கல நெல் கொடுத்த அதே நிலம் புத்துயிர் பெற்று மூன்றாவது ஆண்டிலேயே 900 கலம் நெல் கொடுத்தது.

நிலந்திருத்தின மூன்றாவதாண்டாகிய 1950–51ல் இந்த அமோக வெற்றி. "ஒன்று மில்லையே யென்று சோம்பேறியாய் இருப்பவர்களைப் பார்த்து, பூமிதேவி, 'நானிருக்கும்போது நீ தூங்குகின்றாயே!' என்று சிரிப்பாளாம்"—இங்ஙனம் வள்ளுவர் கூறுகின்றார். ஆனால் ஸ்ரீ பாலசுப்பிரமணிய ஐயரைப் பார்த்துப் பூமிதேவியானவள் "களர் நிலத்தையே திருத்தி விட்டாயே! சபாஷ்!" என்று சொல்லாமலா இருந்திருப்பாள்!

900 கல நெல்லைக் கண்ட இவர் ஆச்சரியப்பட்டு "போதுமென்ற மனமே பொன் செய் மருந்து" என்று வீணே இருந்து விடவில்லை. "முயற்சி திருவினையாக்கும்" என்ற மணி வாக்கே அவருடைய மனத்தில் அல்லும் பகலும் ஒலித்துக் கொண்டிருந்தது. சுமார் 2000 கல நெல்லை நான் இந்த நிலத்தில் எதிர்பார்க்கிறேன் என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார்.

அடுத்த ஆண்டாகிய 1951–52 ல் ஏக்கர் ஒன்றிற்கு, தொழு உரம், கம்போஸ்ட் உரம் என்ற இரண்டில் ஒன்று, பத்து வண்டி வீதம் அடிக்கப்

அறுவடைக்குத் தயாராக உள்ள வயல்கள்.



பட்டது. அத்துடன் 'அமோனியம் ஸல்பேட்' 'சூபர் பாஸ்பேட்' முதலிய ரசாயன உரங்களையும் உபயோகித்தால் நன்மை தருமென்பதையுணர்ந்து அம்முறையிலும் ஈடுபட்டார். அதாவது நடவுக்கு முன்னால் ஏக்கர் ஒன்றிற்கு 100 ராத்தல் சூபர் பாஸ்பேட் போடப்பட்டது. பிறகு முதற் களையெடுத்தவுடன் ஏக்கருக்கு 50 ராத்தல் அமோனியம் ஸல்பேட் தூவப்பட்டது. கடைசியாகக் கதிர் வாங்கும் சமயத்தில் ஏக்கருக்கு 50 ராத்தல் வீதம் அமோனியம் ஸல்பேட் போடப்பட்டது.

இந்த முயற்சியால் நான்காவதாண்டில் 900 கலம் நெல் கிடைத்தது. அதைப் பார்த்த பிறகு அவர் மனம் திருப்தி அடையவில்லை. "இது உழைப்பிற்குத் தகுந்த ஊதியம் இதுவல்ல. 2000 கலம் நெல்தான் என் குறிக்கோள்" என்கிறார்.

இவருடைய சாதனை, குறிப்பாகத் திருக்காட்டுப் பள்ளிச் சுற்று வட்டாரத்துக்கும், சிறப்பாகத் தஞ்சை ஜில்லாவுக்கும், பொதுவாக நாட்டுக்கும் ஓர் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

இந்தப் பண்ணையை மந்திரி ஏ. பி. ஷெட்டி பார்வையிட்ட பின் மாதிரிப் பண்ணைகளில் ஒன்றாகவும் இதைப் பதிவு செய்துள்ளார். தற்போது மின்சார வசதியோடு விளங்கும் இப் பண்ணை விவசாய பாடம் எடுத்துக் கொண்டுள்ள மாணவர்களுக்கு உதவியாகவும், சுற்று வட்டார உழவர்களுக்கு வழி காட்டியாகவும் இருந்து வருகிறது. பால் பண்ணையிலிருந்து கிடைக்கும் தயிர், பால், நெய் முதலியவற்றைக் கொண்டும் தோட்டப் பயிர்த் தொழிலிலிருந்து கிடைக்கும் காய் கறிகளைக் கொண்டும், மேற்படி பண்ணை நெல்லைக் கொண்டும் 120 மாணவர்களைக் கொண்ட "கல்யாணி ஹாஸ்டல்" ரேஷன் முதலியவற்றின் பயமின்றியே நடைபெற்று வருகிற தென்றால் சாதனை பயனளித்து விட்ட தென்று தானே கொள்ள வேண்டும்!

நம் பிரதம மந்திரி ஜவாஹர்லால் அவர்கள் "நம் நாட்டின் ஒவ்வொரு சிறு பகுதியும் சுயதேவை பூர்த்தியோடு விளங்க வேண்டும்" என்று கூறியதற்கு இப்பண்ணை சான்றாக விளங்குகிறது. மேலும் வயலுக்கு வேண்டிய தொழு உரம், தழை உரம், கம்போஸ்ட் உரம் முதலியனவும் வருஷம் ஒன்றுக்குச் சுமார் 700 வண்டிகள் வீதம் தயாராகின்றன. சுயதேவைப் பூர்த்தியைச் செய்து கொண்டதோடு மட்டுமல்லாமல், தாராள எண்ணத்தோடு பிறருக்கும் பயன்பட இப் பண்ணை காத்திருக்கிறது. பொறுக்கு நெல் விதை, சஸ்பேனியா விதை முதலியவற்றை விவசாய இலாகாவுக்கும், பிற பண்ணைகளுக்கும், உழவர்களுக்கும் கொடுத்து உதவி வருகிறது.

இப்பண்ணையோடு சேர்ந்த மற்றொரு பகுதியிலிருந்து, ஆறடி நீளமுள்ள புடலை, இரண்டடி நீளத்திற்கு மேற்பட்ட "லக்னோ மார்வல்" என்ற வெள்ளரிக்காய், "பிளேக்ப்யூடி" என்ற கத்தரிக்காய் முதலியனவும் வேண்டிய அளவு கிடைக்கின்றன.

இதுபோன்ற களர் நிலங்கள், நம் ராஜ்யத்தில் பலவிடங்களில் இன்னும் காணப்படுகின்றன. அவையும் இந்தப் பண்ணை போல் செழிப்படைய வேண்டும். அதற்கேற்ற முயற்சியைக் கிராமத்தார்களும், உழவர்களும் செய்வார்களேயானால் நாடு பிறர் கையை எதிர்பார்க்கும் நிலை மாறுவதோடல்லாமல், நம் நாட்டின் 'சுய தேவைப் பூர்த்தி'த் திட்டமும் நிறைவேறும். திருக்காட்டுப் பள்ளி சிவசாமிபுரம் பண்ணை மற்ற விவசாயிகளுக்கு வழிகாட்டியாகவே இருக்கும்.

"ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு."

# அடிக்க காரணம்

அன்று லக்ஷ்மி பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்கு வரும்பொழுது, அவள் கண்கள் கலங்கியிருந்தன. முகம் அழுததனால் வீங்கிப் போயிருந்தது. அப்பொழுதும் விசிப்பு ஓயவில்லை. அவள் அம்மா, "ஏன், லக்ஷ்மி! இப்படி முகம் குங்குமமாகச் சிவந்திருக்கிறதே, அழுதாயா என்ன?" என்று கேட்டாள்.

அம்மா கேட்டதுதான் தாமதம், அடங்கிப் போயிருந்த லக்ஷ்மியின் அழுகை மறுபடியும் பீறிட்டுக் கொண்டு வந்துவிட்டது.

"ஏன், லக்ஷ்மி! யாராவது உன்னை அடித்தார்களா, என்ன?" என்று கேட்டாள் தாயார்.

லக்ஷ்மி வயதில் சிறியவளாயிருந்தாலும் சுபாவத்திலேயே கெட்டிக்காரி. படிப்பிலும் அவள்தான் வகுப்பில் முதலாக இருப்பாள். அப்படியிருக்கும்பொழுது அவளுடைய வாத்தியார் அம்மா அவளை அடித்திருக்கக் காரணமில்லையே என்ற எண்ணத்தினால்தான் தாயார், "யாராவது அடித்தார்களா, என்ன?" என்று பட்டும் படாமலும் கேட்டு வைத்தாள்.



"ஆமாம், அம்மா! வாத்தியார் அம்மாதான் அடித்தாள்!" என்றாள் லக்ஷ்மி விசிப்புக்கிடையே.

"வாத்தியார் அம்மா அடித்தாளா? நீ என்ன தப்புப் பண்ணினாய்?" என்றாள் தாயார்.

"நான் ஒரு தப்பும் பண்ணவில்லையம்மா!"

"நீ தப்புப் பண்ணாமல் இருந்தால் அடிப்பாளாக்கும்!" என்றாள் தாயார்.

"இல்லையம்மா! இன்று வாத்தியார் அம்மா, 'திருடக் கூடாது, திருடுவது பாவம்' என்று சொல்லிக் கொடுத்தாள்."

"நியாயந்தானே?"

"திருடுவது பாவம் என்பதைப் பற்றி ஒரு நல்ல கதையே சொன்னாள், அம்மா! அதற்கப்புறம் என்னைப் பார்த்து, 'நான் ஒருவருடைய சட்டைப் பையிலிருந்து தெரியாமல் பணத்தை எடுத்து விடுகிறேன் என்று வைத்துக்கொள். என்னை என்ன சொல்லுவார்கள்?' என்று கேட்டாள்."

"'வேறு என்ன சொல்லுவார்கள்? உங்களை அவருக்கு மனைவி என்று சொல்லுவார்கள்!' என்று நான் பதில் சொன்னேன். அதற்காகத்தான் வாத்தியாரம்மா அடித்துவிட்டாள்!" என்றாள்.

இவ்வளவையும் தம் அறையில் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்த லக்ஷ்மியின் தகப்பனார் எழுந்து வந்து, "அதற்காகவா அடித்தாள்? அசட்டு வாத்தியாரம்மா! இன்னும் அவளுக்குக் கல்யாணம் ஆகவில்லை போலிருக்கிறது. நீ அழாதே!" என்று சமாதானப் படுத்தினார்.—'விஷ்ணு'

# இந்தியக் குடும்பங்களின் இருமல் நிவாரணி




இந்தியாவில் லக்ஷக்கணக்கான மக்கள் 'ஸிரோலின்' ரோஷ் உபயோகிப்பதற்குக் காரணம் என்னவெனில்:

- ஸிரோலின் இருமல்களை துரிதமாக சமனப்படுத்துகிறது
- ஸிரோலின் குறைந்த நேரத்தில் இருமல்களை நிறுத்துகிறது
- ஸிரோலின் இனிய ருசியுள்ளது
- ஸிரோலின் குழந்தைகளுக்கும் பயமின்றி கொடுக்கலாம்– அதில் [illegible] தரும் வஸ்துக்கள் யாதொன்றும் இல்லை

**உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் 'ஸிரோலின்' வைத்திருங்கள்**



# பரமசிவத்தின் பரிசம்

— பி. எஸ். மணி —

நாகம்மாள் டிபன் பாத்திரங்கள் அடங்கிய கூடையைத் தூக்க முடியாமல் சுமந்து கால்கள் தள்ளாட நடந்து வந்தாள். நடு மத்தியான வேளையானதால் வெய்யிலின் உக்ரம் கடுமையாக இருந்தது. அவள் கால்கள் சூடு தாங்க முடியாமல் அப்பளமாகப் பொரிந்து விட்டன. இந்து கலாசாலைக் கட்டிடத்தில் நுழைந்ததுந்தான் அவளுக்கு நிழலின் அருமை நன்கு தெரிந்தது. கலாசாலைக் கட்டிடத்தின் வாசற்படியில் கூடையை இறக்கி வைத்து விட்டுச் சிறிது நேரம் ஆசுவாசப் படுத்திக் கொண்டாள்.

இச் சமயத்தில் பிரின்ஸிபால் அறைக்கெதிரே நாகம்மாள் கூடையை இறக்கி வைத்திருப்பதைக் கண்டு பதை பதைத்துப் போய் ஓடி வந்தான் பியூன் பரமசிவம்.

"ஏ, பொண்ணு! உனக்குக் கண்ணிருக்கா? இது பள்ளிக்கூடமா! அல்லது சத்திரமா! போகிற பாதையிலே உன் சாப்பாட்டுக் கூடையை இறக்கி வைத்திருக்கிறாயே!" என்று இரைந்தான் பரமசிவம். அவனுடைய முகத்தில் கோபக் கனல் தெறித்தது.

"இந்தாங்க! சும்மா கோவிச்சுக்கிடாதீங்க. பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்குத்தான் சோறு கொண்டாந்திருக்கேன்......" என்று ஆத்திரத்தோடு பதிலளித்தாள் நாகம்மாள்.

"நீ யாருக்குக் கொண்டு வந்தால் என்ன! கூடை இங்கே இறக்கி யிருப்பதைப் பார்த்தாருன்னு பிரின்ஸிபால் ஐயா என்னுடைய சீட்டை அல்லவா கிழிச்சிடுவாரு!" என்றான் அவன்.

"இந்தா, ஐயா! என்னாலே அனாவசியமா உங்க வேலை போயிட வேண்டாம். அரை நொடியிலே கூடையைத் தூக்கிக்கிட்டுப் போயிடறேன்!" என்று துடுக்காகப் பதிலளித்து விட்டு மிடுக்காக மாணவர்கள் உணவு விடுதியை நோக்கி நடந்தாள் நாகம்மாள். அவள் போய் விட்டாள். போகும்பொழுது பரமசிவத்தின் உள்ளத்தையு மல்லவா அவள் ஈர்த்துச் சென்று விட்டாள்!

பரமசிவத்தினால் பங்கா இழுத்துக் கொண்டு உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவன் சிந்தனை முழுவதும் நாகம்மாளிடந்தான் இருந்தது. பிரின்ஸிபால் பலதடவை மணியடித்தும் அவன் காதில் விழவில்லையென்றால் அவனுடைய மனம் எவ்வளவு தூரம் அவளிடம் ஈடுபட்டிருந்தது என்பதைத் தெரிந்து கொள்ளலாமல்லவா!

அன்று நாகம்மாள் கண்களில் கண்ணீர் மல்கக் கலாசாலைக் குழாயினருகில் நின்று கொண்டிருந்தாள். அவள் மனம் பட பட வென்று வேகமாக அடித்துக் கொண்டது. ஆம்! அவள் கூடையில் வைத்திருந்த ஒரு டிபன் பாத்திரத்தைக் காணவில்லை. டிபன் பாத்திரம் தொலைந்து போய்விட்டது என்று அதன் சொந்தக்காரர் வீட்டில் சொன்னால் நம்புவார்களா! ஏழை சொல் அம்பலம் ஏறுமா! தன்னால் தொலைந்த பாத்திரத்துக்குத்தான் ஈடு செய்ய முடியுமா? வீட்டில் மூன்று ஜீவன்களின் வயிற்றைக் கழுவுவதே பெரிய பாடாக இருக்கையில் இன்னொரு புதிய பாத்திரம் அவளால் எப்படி வாங்கிக் கொடுக்க முடியும்! அதனால் தன் வேலைக்கே வினை வந்து விடுமே! தன்னை நம்பியிருக்கும் அங்கவீனமுள்ள தந்தையையும், வியாதிக்காரத் தாயையும் எப்படிக் காப்பாற்றுவது!—இத்தகைய மனக் குழப்பங்கள் அவள் மனத்தில் எழுந்து வேதனை செய்தன.

நாகம்மாள் துடிதுடித்துப் போய்ச் செய்வதறியாது திகைத்துப் போய் நின்றாள். இச்சமயத்தில்தான் பியூன் பரமசிவம் தற்செயலாக அங்கு வந்து சேர்ந்தான். நாகம்மாள் கண்கள் கலங்க நிற்பதைக் கண்டு பதறிப்போய், 'என்ன பொண்ணு! ஏன் இப்படி திகைத்துப் போய் நிற்கிறே! உன் கண்கள் ஏன் கலங்கி யிருக்குது!" என்று வியப்புடன் வினவினான் பரமசிவம்.

"குழாயிலே பாத்திரத்தைக் கழுவிக்கிட்டு இருக்கையில் யாரோ கூடையிலிருந்த டிபன் பாத்திரத்தை எடுத்திட்டுப் போயிட்டாங்க!" என்று கூறினாள் நாகம்மாள். துக்கம் அவள் தொண்டையை அடைத்தது.

"அழாதே! இந்தப் பள்ளிக்கூடத்திலே அப்படிச் சாமான் ஒண்ணும் கெட்டுப் போயிடாது. நீ எங்கேயாவது மறந்து வைச்சிருப்பே!" என்று கூறிவிட்டு மாணவர் விடுதி முழுதும் தேடிப் பார்க்கச் சென்றான்.

ஒரு அறையில் மாணவன் ஒருவன் சாப்பிட்டு விட்டு டிபன் பாத்திரத்தை அப்படியே வைத்திருப்பதைக் கண்டதும் பரமசிவம் ஆனந்தத்தினால் துள்ளிக் குதித்துக் கொண்டே அதை எடுத்துக் கொண்டு வந்தான்.

"இந்தா! நீ அறியாப் பொண்ணா யிருக்கியே! கூடையிலே டிபன் பாத்திரத்தை எடுத்து வைக்காமலேயே காணவில்லேன்னு சொன்ன உன் புத்திசாலித்தனத்தை என்னவென்று சொல்ல! உன்னைப்போல மறதியுள்ள பெண்ணைப் பார்த்ததில்லே!" என்று கூறியபடி அவள் கையில் டிபன் பாத்திரத்தைக் கொடுத்தான் பரமசிவம்.

"ஆமாம்! நான் மறந்துட்டேன். அந்த ஐயா நேரங் கழிந்து வந்தாரு. அவரு சாப்பிட்டப்புறம் பாத்திரத்தை எடுத்துக்கலாம்னு வந்துட்டேன். அது மறந்து போய்ப் பாத்திரம் தொலைந்து போச்சுன்னு துடியாய்த் துடிச்சுட்டேன்! நீங்க சமயத்திலே வந்து எடுத்துக் கொடுத்தீங்க. இல்லாட்டா நான் அந்தப் பாத்திரத்துக்குத் தண்டம் போடணும்!" என்று கூறி நன்றியறிதலோடு அவனைப் பார்த்தாள்.

அன்றிலிருந்து நாகம்மாள் பரமசிவத்தினிடம் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டாள். மணக்




"மாலையில் என் கணவர் எங்கே போகிறார் என்று கண்டு பிடிக்க ரொம்ப நாளாக எனக்கு யோசனை. பிறகு நேர்லு ஒரு நாள் மாலை விட்டிற்குப் போனேன். அங்கு கண்ட காட்சி என்னைத் தூக்கி வாரிப் போட்டு விட்டது."

"என்னடி நடந்து விட்டது."

"ஒன்றுமில்லையடி, கணவர் எங்கேயும் போகாமல் வீட்டில் ஆனந்தமாக 'அசோகா' பாக்குத் தூளைப் போட்டுக் கொண்டு சாய்ந்திருந்தார்."

தால் பரமசிவத்தைத்தான் மணப்பது என்ற நிலைக்குக்கூட நாகம்மாள் வந்து விட்டாள்.

ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள்தான் நாகம்மாள். அவளுக்குச் சின்னஞ் சிறு வயதிலேயே தன் தாய் தந்தையரைக் காப்பாற்றும் பொறுப்பு விழுந்து விட்டது. விதியின் கொடுமையினால் கால் இழந்த தகப்பனாரையும், வியாதியால் அல்லலுறும் தாயையும் பெற்றிருக்கையில் அவள் உழைக்காமல் இருக்க முடியுமா! நாலு வீட்டில் பாத்திரங்களைத் தேய்த்துக் கொடுத்தும், பள்ளிக் கூடப் பையன்களுக்கு மத்தியானச் சாப்பாடு எடுத்துச் சென்றும் பெறும் ஊதியத்தை வைத்துத் தன் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தாள்.

பரமசிவத்தின் நட்பு ஏற்பட்ட பிறகு நாகம்மாளுக்கு வேலையில் அதிக கவனம் செல்லவில்லை. சதா அவனுடைய நினைவும் அவன் பேச்சும் அவள் உள்ளத்தை நிலைகொள்ளாமல் தவிக்க வைத்தன. தம் பெண்ணிடம் புதிய மாறுதல் தென்படுவதைக் கவனித்த நாகம்மாளின் தாயார் பர்வதம் தன் கணவனிடம், "இந்தாங்க! நாகம்மாளுக்கு வயசாகி விட்டது. இனிமேல் அவளை வேலைக்கு அனுப்புவது உசிதமில்லைன்னு தோணுது!" என்று எச்சரிக்கை செய்தாள்.

"ஆமாம்! அவள் வேலைக்குப் போக வேண்டாம்னு சொல்விட்டா யாரு நமக்கு உழைச்சுப் போடுவாங்க! நான்தான் இப்படி எழுந்திருக்கக் கூடச் சக்தியில்லாமே இருக்கேனே!" என்று பரிதாபக் குரலில் பதிலளித்தார் பிரமநாயகம்.

"நம்மை அவள் ஆயுசு முழுதுக்குதான் காப்பாத்தனும். அதற்காக வயசுப் பொண்ணைக் காலா காலத்திலே கட்டிக் கொடுக்காட்டா வம்பில்லே வளரும்!" என்று தொடர்ந்து கூறினாள் பர்வதம்.

"வம்புக்குப் பயந்தால் நாம் பட்டினி கிடக்க வேண்டியதுதான்!" என்றார் பிரமநாயகம்.

"ஏன் இப்படி அலுத்துக்கிறீங்க!......நான் தள்ளாடி நடந்து சென்றுவது நாலு வீடு உழைக்கிறேன்......!" என்றாள் பர்வதம்.

இச்சமயத்தில் அந்தப் பக்கம் வந்த நாகம்மாளைக் கண்டதும் பர்வதம் அவள் பக்கம் திரும்பி, ஜாடை மாடையாக அவள் கல்யாணத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தாள். நாகம்மாள் அதற்குச் சிறிதும் இடங் கொடுக்காமல், "அம்மா! அதுக்குள்ளாறே எனக்குக் கல்யாணத்துக்கு என்ன அவசரம்! உங்களை யாரு காப்பாற்றுவாங்க!" என்று பதிலளித்து விட்டாள்.

ஆனால் பர்வதம் விடாமல், "நீ எங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்! நாலு வீடு தள்ளி நல்ல செவளில்லே! அவனுக்கு உறவுமுறை ஒருத்தருமில்லை. அவனுக்கு வேண்டிய நிலநீச் சிருக்கு. அவனும் ஒத்தாசைக்கு ஆளில்லாது திண்டாடுகிறான்! அவனும் உன்மேலே உசிரையே வைச்சிருக்கான். அவனுக்கு உன்னைக் கட்டிக் கொடுத்திட்டா நம்மகஷ்டம் விடிஞ்சிடும்!" என்று மெதுவாகத் தன் யோசனையைச் சொன்னாள்.

நாகம்மாள் பதிலே பேசவில்லை. நல்ல சிவலைக் கல்யாணம் செய்து கொள்ள அவள் எப்படி இஷ்டப்படுவாள்! அவள் உள்ளத்தைத்தான் ஏற்கனவே ஒருவன் பறித்துச் சென்று விட்டானே!

ஆனால் தினம் இந்து கலாசாலைக்குச் செல்லும் பொழுது அவள் பரமசிவத்தைக் கண்டு பேசுவது நிற்கவில்லை. அவர்கள் காதல் நாளுக்கு நாள் கொழு கொம்பைப் படரும் பசுங் கொடிபோல் வளர்ந்து பூத்துக் குலுங்கியது.

கலாசாலை கோடை விடுமுறைக்காக மூடப் பட்டது. நாகம்மாள் பள்ளிக்கூடப் பையன்களுக்குக் கொண்டு போகும் சாப்பாடு நின்று விட்டது. பரமசிவத்தைக் காண முடியாது போய் விட்டதே என்பதில் நாகம்மாளுக்கு அளவு கடந்த வருத்தம். பிரிவில்தானே அன்பும் ஆசையும் பெருகி வளரும்!

* * *

மூன்று மாதங்களும் மூன்று யுகங்களாக நாகம்மாவுக்குக் கழிந்தன. கலாசாலை கோடை விடுமுறைக்குப் பிறகு திறந்ததும் நாகம்மாள் வழக்கம்போல் டிபன் பாத்திரங்கள் அடங்கிய கூடையைத் தலையில் வைத்துக் கொண்டு புறப் பட்டு விட்டாள்.

கலாசாலைக் கட்டிடத்துக்குள்ளே அடி வைத்ததும் அவளையுமறியாமல் அவள் கண்கள் பிரின்சிபால் அறை வாசலை நோக்கின. என்ன ஏமாற்றம்! பரமசிவத்தை அங்கு காணவில்லை. அவன் உட்கார்ந்திருந்த இடத்தில் வேறொருவன் அமர்ந்திருக்கக் கண்டாள்.

அவள் ஏமாற்றத்துடன் அந்தப் புதிய மனிதனை நெருங்கி, "ஏன் ஐயா! இங்கே முன்பு ஒருவரு இருந்தாரே, அவர் எங்கே!" என்று கேட்டாள்.

அந்தப் புதிய பியூன் அவளை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு, "என்ன, யாரைக் கேட்கறே! பரமசிவத்தையா! அவன் போன வருசமே வேலையை விட்டுப் போயிட்டானே!...... எனக்குத்தெரிந்து அவன் ஒரு இடத்திலே நிலைத்து வேலை செய்ததில்லை. ஆமாம்! அவனுக்கென்ன!" என்று வினவினான் புதிய பியூன்.

"ஒன்றுமில்லை. அவரைப் பற்றி ஒருத்தரு விசாரிச்சுகிட்டு வரச் சொன்னாரு. அதனால் தான்......" என்று மழுப்பிவிட்டுக் கூடையைத்

தலையில் வைத்துக் கொண்டு அங்கிருந்து வெகு வேகமாக நழுவினாள் நாகம்மாள்.

அவள் மனம் பரமசிவத்தைக் காணத் துடித்தது. 'அவரை எங்கே பார்க்கலாம்? ஆம்! அவர் சிந்து பூந்துறை வடக்குத் தெருவில் குடியிருப்பதாகச் சொன்னார் அல்லவா! அங்கே போய்ப் பார்த்தால் என்ன!' என்ற எண்ணம் தோன்றியதும் நாகம்மாள் இயந்திரம்போல் கூடையைக் கவிழ்த்து... வங்களை மூடித்துக்கொண்டு பரமசிவத்தின் வீட்டைத் தேடிப் புறப்பட்டாள். வழி நெடுக, அவனைப் பார்த்தால் எப்படிப் பேசுவது என்பதைப் பற்றியும், தன்னைச் சந்திக்காததைக் குறித்துக் கோபித்துக் கொள்ள வேண்டும் என்ற சிந்தனையுடனும் அவள் சென்றாள்.

அரை மணி நேரத்திற்குப் பிறகு வெகு சிரமப்பட்டு அவள் பரமசிவத்தின் வீட்டைத் தேடிக் கண்டு பிடித்தாள். வீட்டின் வாசற்படியில் காலடி வைத்ததும் வீட்டினுள் ரகளை நடக்கும் சத்தம் கேட்டுப் பின் வாங்கினாள். அவள் நின்ற இடத்திலிருந்து பார்த்தால் வீட்டில் நடக்கும் ஒவ்வொரு காட்சியும் தெரிந்தது. பேச்சும் தெளிவாகக் காதில் விழுந்தது

* * *

பரமசிவம் தன் தாயோடு ஏதோ பலத்த விவாதம் செய்து கொண்டிருந்தான். அவன் கண்கள் கோபத்தினால் சிவந்திருந்தன. கை அவளை அடிக்க ஓங்கியபடி இருந்தன.

அவன் கடுமையான குரலில், "இந்தா! நீ வைச்சிருக்கிற ஒரு ரூபாய்க் காசைக் கொடுத்துடு. மூன்றரை மணி சினிமா ஆட்டத்துக்குப் போவணும்!" என்று இரைந்தான்.

"தம்பி! நம்ம வீட்டிலே ஒரு பொட்டு அரிசியில்லே. ஒரு ரூபாயைக் கொடுத்திட்டா இரவுக்கு என்ன பண்ணறது!" என்று தயக்கத்துடன் கூறினாள் அவன் தாய்.

"எனக்குச் சோறு வேண்டாம். நீ இரவு ஒரு வேளைதான் பட்டினி கிடவேன். செத்தா போயிடுவே? நான் உழைச்சுப் போட்டப்போ மூணு வேளையும் தின்னவில்லையா!.........சரி! உன் பிலாக்கணத்தை அப்புறம் வைச்சுக்கலாம். பொழுது போவுது. அப்புறம் ஆட்டம் ஆரம்பிச்சுடுவாங்க!" என்று கூறி அவளிடமிருந்து பலாத்காரமாகக் காசைப் பிடுங்கிக்கொண்டான் பரமசிவம். அவன் தாய் 'ஐயோ' 'முறையோ' என்று கூவினாள்.

இந்தக் காட்சிகளைக் காணச் சகிக்காது நாகம்மாள் வந்த வழியே திரும்பினாள். பரமசிவம் தன் தாயிடம் நடந்து கொண்ட விதம் அவளுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஆனால் அவள் நாலைந்து அடி கூட எடுத்து வைத்திருக்க மாட்டாள், அதற்குள் பரமசிவம் அவளைப் பார்த்து விட்டான்.

"இந்தா, நாகம்மா! நில்லு!" என்று அதிகாரத் தொனியில் கூறிய வண்ணம் ஓடி வந்தான் பரமசிவம். நாகம்மாள் அவனுடைய குரல் கேட்டதும் சிறிது தயங்கியபடி நின்றாள்.

"இந்தாங்க! உங்க அம்மாவை மிரட்டின மாதிரியல்ல என்னையும் மிரட்டுறீங்க. என்னை அடிச்சுப் போடாதீங்க!" என்று எகத்தாளமாகச் சிரித்துக் கொண்டே கூறினாள் நாகம்மாள்.

"உன்னை அடிக்க எனக்குப் பைத்தியமா பிடிச்சிருக்கு! வீட்டிலே கம்மா உட்கார்ந்து சோறு சாப்பிடணும்னு அதற்கு ஆசை. எனக்கு உழைச்சுப் போட அவளுக்கு வெறுப்பாயிருக்கிறது!... அது சரி! இப்போ மூன்றரை மணி படம் பார்க்க நீ வறயா, போகலாம்!" என்றான் பரமசிவம்.

"நான் வரலே! எங்க தாய்க்கும் தகப்பனுக்கும் சோறு சமைத்துப் போடணும். எனக்காக அவங்க காத்துக்கிட்டு இருப்பாங்க!" என்று பதிலளித்து விட்டுப் புறப்பட்டாள் நாகம்மாள்.

"ஆமாம்! நீ ஒரு உலகம் தெரியாத பொண்ணு. எப்போ பார்த்தாலும் உனக்கு வீட்டு வேலைதான். சரி! நாழியாயிடுச்சு. ஆட்டம் ஆரம்பிச்சிடுவாங்க. நான் வரேன்! என்னை மறந்துடாதே!" என்று செல்லமாக அவள் கன்னத்தில் தட்டி விட்டுச் சென்றான் பரமசிவம். அவன் கைபட்ட அந்த இன்ப ஸ்பரிசத்தில் அவளுக்கு அவன்மீதேற்பட்ட கல்மிஷங்கூடக் கரைந்து விட்டது. காதலுக்குத்தான் கசப்பையும் மறக்கடிக்கச் செய்யும் சக்தி இருக்கிறதே!

இன்ப வெள்ளத்தில் மூழ்கிப் போய் மலர்ந்த முகத்துடன் வீடு திரும்பினாள் நாகம்மாள். வீட்டினுள் நுழைந்ததும் துயரம் ததும்பும் செய்தி அவளுக்காகக் காத்திருந்தது.

"என்ன நாகம்மா! இப்படி ஆடி அசைந்து வர்றியே!...பாரு! உன் அக்கா புருசன் அவளை வீட்டை விட்டு விரட்டிட்டான். அவள் குழந்தைகளோடு இங்கே வந்துட்டாள். வீட்டிலே கஞ்சி வைக்கக்கூட அரிசியில்லே. நல்ல காலம்! நல்லசிவன் தம்பி இந்தப் பக்கமா வந்தான். அவன் நிலைமையைப் புரிஞ்சுக் கிட்டுக் கடைக்குப் போய்ச் சாமான்களை வாங்கிட்டு வரப் போயிருக்கான்!" என்று பொரிந்து தள்ளினாள் பர்வதம். வியாதியினால் படுத்திருந்த பர்வதத்துக்குப் பட பட வென்று பேசியதில் இருமல் பலமாக வந்துவிட்டது. நெஞ்சை அமுக்கிக்கொண்டு அவள் பல தடவை இருமினாள்.

இச்சமயத்தில் கடைக்குச் சென்ற நல்லசிவன் அரிசி, காய்கறி வகைகளோடு வந்து சேர்ந்தான்





"தம்பி நல்லசிவம்! நீ நல்லா யிருக்கணும். உன்னைப் போல பிரதி பலன் பாராம உதவி செய்யற பிள்ளையை நான் கண்டதில்லே!" என்று பூரிப்போடு பகர்ந்தாள் பார்வதம்.

"கஷ்டப்படறவங்களுக்கு உதவி செய்யத் தானே கடவுள் மனுசனை ஆர்த்தியோடு படைச்சிருக்காரு!" என்று வேதாந்தம் பேசிவிட்டு விடுவிடென்று நடையைக் கட்டினான் நல்லசிவன்.

நாகம்மாள் திக்பிரமை பிடித்தவள் போல் கல்லாகச் சமைந்து நின்று நல்ல சிவன் போவதையே நன்றிப் பார்வையுடன் நோக்கினாள்.

நல்லசிவன் போன பிறகு பார்வதம், "பார்த்தாயா, நாகம்மா! நல்லசிவனைப் போலப் பெற்ற பிள்ளைகூட இவ்வளவு அன்போடு ஒருவருக்குப் பணிவிடை செய்ய மாட்டான். இவன் மட்டும் எனக்கு மருமகனாக வாய்த்தால்..." என்று முணுமுணுத்தாள். பார்வதம் முணுமுணுத்ததெல்லாம் நாகம்மாளின் செவியில் விழத்தான் செய்தது. ஆனால் அந்த வார்த்தைகள் அவள் இதயத்தில் எந்தவிதமான சலனத்தையும் உண்டாக்க வில்லை. அவள் இதயம் பரமசிவத்தினிடம் அல்லவா அடைக்கலம் அடைந்திருந்தது!

நாட்கள் இமைப் பொழுதாகக் கழிந்தன. நாகம்மாளின் குடும்பத்துக்கு நல்ல சிவன் வேண்டிய உதவி புரிந்து வந்தான். அவனுடைய ஒத்தாசையினால் பார்வதத்துக்குக் கூட வியாதிப் படுக்கையிலிருந்து எழுந்து நடமாட சக்தி ஏற்பட்டது. நாகம்மாள் ஒழுங்காகத் தனது வேலைகளையெல்லாம் கவனித்து வந்தாள்.

வழக்கம்போல் அன்றும் சாப்பாட்டுக் கூடையுடன் கலாசாலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள் நாகம்மாள். திடீரென்று அவளை மேலே செல்ல வொட்டாமல் ஒரு தடை ஏற்பட்டது. ஏறிட்டு நோக்கினாள் அவள். பரமசிவந்தான் ஆஜானு பாகுவாக எதிரே நின்றான்.

"இந்தாங்க! உங்களுக்கு வேறே வேலை கிடையாதா! போகிற வழியை மறைச்சுக்கிட்டுப் போகிறவர்களைத் தடுத்து நிறுத்துவதுதானா வேலை!" என்றாள் நாகம்மாள்.

"வயிற்றுப் பாட்டுக்கு உழைச்சுப் போட ஆளிருக்கும்போது நான் எதுக்கு வேலைக்குக் கவலைப் படணும்!" என்று பதிலளித்தான் பரமசிவம்.

"ஆமாம்! அதனால்தான் ஊரைச் சுற்றிச் சுற்றி வரும் தின்னைத் தூங்கிகளின் கோஷ்டியிலே சேர்ந்துட்டீங்களாக்கும்!"

"அது சரி, என் தாயின் தொந்தரவு பொறுக்க முடியலே. நான் பட்டணத்துக்குப் போயிடலாம்னு இருக்கேன். உன்னையும் அழைச்சிட்டுப் போயிடலாம்னு......"

"உள்ளூரிலே விலைப் போகாத மாடு அசலூரிலே விலைப் போயிடுமா!"

"உன் இடக்குப் பேச்சு இருக்கட்டும். என்னுடன் புறப்பட்டு வர்றயா, சொல்லு! என்னோடு வந்துட்டா உனக்கு இந்தக் கஷ்ட ஜீவனம் வேண்டாம்!"

"உன்னோடு புறப்பட்டு வந்துட்டா என்னை நம்பி வாழும் என் குடும்பத்தின் கதி என்ன ஆவது!" என்று கவலையுடன் கேட்டாள் நாகம்மாள்.

"நீ உன் குடும்பத்தைப் பற்றி ஏன் கவலைப் படறே! அவர்களை கவனிச்சுக்கிறாங்க. நீ புறப்பட்டு வந்துடு! வேண்டாத கவலைப்பட்டு மனசைப் புண்ணாக்கிக்காதே!" என்று புத்திமதி கூறினான் பரமசிவம்.

"என் வியாதிக்காரத் தாயும், நடக்கச் சக்தியற்ற தகப்பனும் நான் உழைச்சுப் போட்டால் தானே வயிற்றை நிரப்ப முடியும்! நான் திடீரென்று புறப்பட்டுட்டா அவங்க பட்டினியால் தவிக்கணுமே!" என்று ஏங்கினாள் நாகம்மாள்.

"இந்தா, பொண்ணு! உனக்கு உலகமே தெரியலையே! மரம் வைச்சவன் தண்ணீர் விடாமலா போவான்! நீ இல்லாட்டா உன் குடும்பம் செத்திடும்னு நினைக்கிறே! இப்போ நான் வந்துடறதினாலே என் தாய் உழைக்காமலா இருந்துடப் போறாங்க! நீயும் நானும் இன்றைக்கே புறப்பட்டுவிடலாம்!" என்று கூறினான் பரமசிவம். அவன் முகத்தில் கவலையோ துயரமோ சிறிதும் இருப்பதாகத் தெரியவில்லை.

பரமசிவத்தின் நிர்த்தாட்சண்யமான பதில் நாகம்மாளை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. அவன் அன்பின் பேரிலே அவளுக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டது. உடனே அவளுக்குத் தன் அக்காவின் கதைதான் அச்சமயத்தில் ஞாபகத்துக்கு வந்தது.

ஆம்! அவள் அக்கா இப்படித்தான் ஒருவனுடைய வார்த்தையில் மதிமயங்கி அவனை மணந்தாள். அவனுடன் வடநாட்டுக்குச் சென்றாள். அவனுக்குக் குடும்பம் பெருகியதும் அவர்களைக் காப்பாற்ற முடியாமல் அவன் வீட்டை விட்டே விரட்டி விட்டான். அவள் அக்கா குழந்தை குட்டிகளோடு தாய் வீடு ஏகினாள்......

இந்தச் சோகக் கதை நினைவுக்கு வந்ததும் நாகம்மாள் அப்படியே மெய்மறந்து போய் நின்றாள். பரமசிவம் நாகம்மாளின் மௌனத்தைக் கண்டு, "என்ன யோசிக்கறே! முதலில் குடும்பத்தை விட்டுப் பிரியச் சங்கடமாய்த்தானிருக்கும். பிறகு சரியாய்ப் போய்விடும்!" என்றான்.

நாகம்மாளுக்குத் தன் நிலையைக் கண்டு பரமசிவம் இரங்காதது மனவருத்தத்தை யளித்தது. அதோடு அவளுக்கு அவனுடைய கடுமையான சொற்கள் மிகுந்த ஆத்திரத்தையும் கோபத்தையும் உண்டாக்கின.

"போதும்! கொஞ்சம் தள்ளி நில்லுங்க. வாழ்க்கை என்பது பயந்து ஓடிப் போவதால் இனித்திடாது. உங்களைப் போலச் சுயகாரியப் புலிகளை நம்பினால் மண் குதிரையை நம்பி ஆற்றிலே இறங்கின கதைதான். நீங்க என் குடும்பத்தின்மீது காட்டும் வெறுப்பிலிருந்தே உங்களுக்கு என்மீதுள்ள அன்பு தெரிந்து விட்டதே!"

"நாகம்மா! ஏன் இப்படிக் கோவமாப்பேசறே! நான் என்ன அப்படி தவறாய்ச் சொல்லிவிட்டேன்!" என்று வியப்புடன் கேட்டான் பரமசிவம்.

ஆனால் அவள் அவனுடைய ஆறுதல் வார்த்தைகளுக்குச் சிறிதும் மசியாமல், "உங்களுக்குக் கஷ்டத்தையும் துக்கத்தையும் ஏற்கும் குணம் இல்லை. அருமைத் தாயாரை வைத்துக் காப்பாற்றத் தெரியாத நீங்க என்னை ஆயுசு முழுவதும் காப்பாற்றுவீங்களா! சந்தேகந்தான். உங்களை நம்பி என் வாழ்வைக் கெடுத்துக் கொள்ள நான் இஷ்டப்படவில்லை. என்னை மறந்துடுங்க!" என்று கோபக் கனல் தெறிக்கக் கூறிவிட்டு விடுவிடென்று அங்கிருந்து நடந்தாள்.

கோபாவேசத்தில் மூழ்கியுள்ள நாகம்மாவைத் தடுத்து நிறுத்தும் சக்தி அப்பொழுது பரமசிவத்துக்கில்லை. அவனைச் சிறிதும் திரும்பிப் பாராமல் தன் இதயத்தையும் கல்லாக்கிக் கொண்டு கலாசாலையை நோக்கிச் சென்றாள் நாகம்மாள். வருத்தத்தினால் அவள் கண்கள் நீரைப் பெருக்கும் சக்தியின்றி யிருந்தன.

நாகம்மாள் அன்று மாலை சோர்ந்த முகத்தோடு வீடு திரும்பினாள். அவளுக்குத் தலை கனத்தது. வீட்டினுள் நுழைந்ததும், "அம்மா! எனக்குத் தலைவலி பொறுக்க முடியலை" என்று கூறித் தன் தலையைப் பிடித்துக் கொண்டு ஒரு மூலையில் படுத்து விட்டாள். தலைவலி, மனக் கவலையினாலும் வேதனையாலும் அதிகமாகி அவளைப் படுக்கையில் தள்ளி விட்டது. ஒரு வாரம் கடுஞ் சுரத்தில் படுத்து விட்டாள் நாகம்பாள்.

அன்று அவள் தாயார் பர்வதம் தள்ளாடித் தள்ளாடி வந்து மருந்து கொடுத்துக் கொண்டே "பார்த்தாயா, நாகம்மா! அன்றைக்கே நல்ல சிவனைக் கல்யாணம் கட்டிக்கிடு என்று சொன்னேன். நீ காதிலே வாங்கிக்கிடலை. இப்போது அவனுக்குக் கோடி வீட்டு முருகாயி தன் மகளைக் கல்யாணம் செய்து கொடுக்க நிச்சயதார்த்தம் செய்துட்டா!" என்று அறிவித்தாள்.

"அம்மா! எனக்கு யாரையும் கல்யாணம் கட்டிக்கிட மனசில்லை" என்று தணிந்த குரலில் பதிலளித்தாள் நாகம்மாள்.

## பிரபல திருமணம்



திருநெல்வேலி ஜில்லா, பாளையங்கோட்டை ரிடயர்டு ஜில்லா ஜட்ஜ் ராவ்பகதூர் ஸ்ரீ டி. ஏ. சுப்பய்யா பிள்ளை அவர்களின் இளைய குமாரர் திருவளர் செல்வன் என். பரமசிவம், B.Sc.(Hons.) அவர்களுக்கும் புளியரை பண்ணையார் பி. சிவசங்கரம் பிள்ளை அவர்களின் குமாரி திருவளர் செல்வி மரகதவல்லி என்ற **சிவகாமசுந்தரிக்கும்** சென்ற மாதம் 25ம் தேதி மணமகள் இல்லத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. ஏராளமான பந்து மித்திரர்களும் மற்றும் பல பிரமுகர்களும் வந்து திருமணத்தை நடத்தி வைத்து தம்பதிகளை ஆசிர்வதித்தனர்.

**வாழ்க பரமசிவம் - சிவகாமசுந்தரி!**

"இந்தா, பர்வதம்! வியாதியா படுத்திருக்கிறவ கிட்டே அவள் மனவேதனைப் படும்படி ஒன்றும் பேசவேண்டாம்!" என்று கோபித்துக் கொண்டார் பிரமநாயகம்.

பத்து நாட்களுக்குப் பிறகு நாகம்மாள் படுக்கையிலிருந்து எழுந்து நடமாடத் தொடங்கினாள். அன்றே அவள் சாப்பாட்டுக் கூடையுடன் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டு விட்டாள். ஆம்! நாலைந்து ஜீவன்களைக் காப்பாற்றும் பொறுப்பு அவளிடம் விழுந்திருக்கையில் அவள் வீட்டில் சும்மா உட்கார்ந்திருக்க முடியுமா, என்ன!

வழக்கம் போல் சாப்பாட்டுக் கூடையுடன் தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்றாள் அவள். அவளுடைய மலர்ந்த முகத்தில் நிலவிய பிரகாசம் எங்கேயோ மறைந்து விட்டது.

கலாசாலைக் கட்டிடத்தில் நுழைந்ததும், "நாகம்மா!" என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள் அவள். பிரின்ஸிபால் அறை வாசலில் டவாலி அணிந்து உட்கார்ந்திருந்த மனிதன் எழுந்து வந்தான்.

"என்ன நீங்களா!" என்று ஆச்சரியத்துடன் வினவினாள் நாகம்மாள். அவள் முகத்தில் வியப்பும் ஆச்சரியமும் நிலவின.

"ஆமாம்! நீ அன்று கூறிய வார்த்தைகள் என் மனதிலே சாட்டிபோலப் பாய்ந்து விட்டன. என்னுடைய அறியாமையை நானே நொந்துக் கிட்டேன், ஒரு பெண் பிள்ளைக்கு இருக்கிற கடமை உணர்ச்சிகூட எனக்கில்லையே என்று! உடனே பிரின்ஸிபால் ஐயா காலில் விழுந்து எனக்கு வேலை தரும்படி கெஞ்சினேன். எனக்கு உடனே வேலை கிடைத்து விட்டது!" என்று மகிழ்ச்சியுடன் கூறினான் பரமசிவம்.

அவனுடைய வார்த்தைகள் நாகம்மாவை ஆனந்தக் கடலில் மூழ்கடித்து விட்டது. அதிலிருந்து கரையேற முடியாமல் திக்கு முக்காடிப் போனாள் அவள்.

"நாகம்மா! நாளைக்கு என் அம்மாவையும் அழைச்சிக்கிட்டுப் பரிசம் போட உங்க வீட்டுக்கு வரப்போறேன். இப்பவே சொல்லி விட்டேன்!" என்று ஆனந்தம் பொங்கக் கூறினான் பரமசிவம்.

நாகம்மாள் பதிலே பேசவில்லை. அதற்குப் பதிலாக அவளுடைய மலர்ந்த முகத்தில் தெளிந்த புன்முறுவலே சம்மதமளித்து விட்டது.

டிபன் பாத்திரக் கூடையுடன் நாகம்மாள் மாணவர் விடுதியை நோக்கி நடந்தாள். அவளுக்கு ஆனந்தத்தினால் கால்கள் தரையில் பாவவில்லை.

# படித்துப் பாருங்கள்!

## மூன்று மாத ரகசியம்

ராமசேதுவின் மனைவி தேவகாந்தாவைப் போல் யாராலும் நாவல் படிக்க முடியாது; அவள் கணவன் மாதிரி யாராலும் அலுக்காமல் நாவல் கேட்கவும் முடியாது. இதைப் பற்றிக் கூறும் "கற்பனையும் காரிகையும்" என்ற தலைப்பில் வந்துள்ள கதை ஒரு நல்ல கதை.

பொன் தாமரைக் குளத்துக்குப் பூங்கோதை வந்ததும் அடேயப்பா, அந்த ஊர் வாலிபர்கள் பட்ட பாடு! அவர்களுடைய வீர வாலிபர் சங்கம் எடுத்துக்கொண்ட நடவடிக்கை! அந்தச் சங்கத் தலைவன் வேலாயுதம் அடைந்த மனமாற்றம்!... இப்படி ஆச்சரியக் குறிகளாகப் போட்டுக் கொண்டே போகலாம். இந்த விவரங்கள் "பூங்கோதையின் பூர்வோத்தர"த்தில் அற்புதமான ஒரு கதையாக வடிவெடுத்திருக்கின்றன.

"பைங்கிளியின் தியாக"த்தைப் படிப்பவர் எப்படிப்பட்டவரானாலும் அவருடைய நீர நெஞ்சமும் திடுக்கிட்டு விடும்; ஆனால் கடைசியில் படித்து முடித்ததும், எப்படிப்பட்ட சிடுசிடுப்புக்காரரானாலும் சிரித்தே தீர வேண்டும்.

"ஐயோ சாகுகிறான் பாவி!
எங்(கு) வைத்தேன் பெட்டி சாவி!
மேலேபோய்ப் பாருடா தம்பி!
இல்லாட்டா நீட்டுறேன் கம்பி!"

என்னும் கவியைப் படித்ததும் கவி குஞ்சர கனகசபைப் பாவாணர் அவர்களின் கவிதைகள் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் படித்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பது என்று தோன்றினால் அதில் அதிசயம் ஒன்றும் இல்லை. அவரைப் பற்றியும் அவருடைய கவிகளைப் பற்றியும் "கவியின் யோக"த்தில் படித்துச் சிரிக்க வேண்டும்.

இந்த நூலின் முன்னுரையில் ஆசிரியர் "கல்கி" கூறுகிறார்:—

"மிருகேந்திரனாகிய சிங்கத்துக்குச் சிரிக்கத் தெரியாது; புலிக்கும் யானைக்கும் சிரிக்கத் தெரியாது. குதிரை கனைப்பது சிரிப்பது போல் இருக்குமே தவிர, அதுவும் சிரிப்பதில்லை. மகாகனம் பொருந்திய ஆகாகான் அவர்களின் பந்தயக் குதிரைகள் கூடப் பந்தயத்தில் தோற்றுப் போன மற்றக் குதிரைகளைப் பார்த்துச் சிரிப்பதில்லையாம்.........

"ஆம். உலகில் வாழும் ஜீவராசிகளில் சிரிக்கத் தெரிந்தவன் மனிதன் ஒருவன்தான். மனிதன் சிரிப்பதுடன் நிற்பதில்லை. சிரிப்பாய்ச் சிரிக்கவும் செய்வான்!

"அவ்விதம் கடவுள் மனிதனுக்கென்று பிரத்தியேகமாக அளித்திருக்கும் வரப்பிரசாதமாகிய சிரிப்பை உண்டாக்கவும் பெருக்கவும் வளர்க்கவும் பாடுபடுகிறவர்கள் எல்லாரும் கடவுளுக்கு உகந்த திருப்பணியைச் செய்கிறவர்கள் அல்லவா!"

இப்புத்தகத்துக்குத் தகுந்த கருத்துப் பொதிந்த அட்டைப் படத்தைச் சித்திரித்திருக்கிறார் சந்திரா.

எழுதியவர்: எம். எஸ். மணி; பிரசுரம்: கந்தி பிரசுரம், 90, தம்பு செட்டித் தெரு, சென்னை-1. விலை ரூ. 1-8-0.

## சுலப ஹிந்தி போதினி

எதையும் சுலபமாகச் செய்ய விரும்பும் காலம் இது. சுலப கணிதம், இலகு வைத்தியம் போன்ற சுலப நூல்கள் நிறைய வந்திருப்பதிலிருந்து அந்த ஆர்வத்தை நன்கு உணரலாம். அப்படியிருக்க நம் பாரத தேசத்தின் பொது மொழியான ஹிந்திக்கு மட்டும் சுலப முறை வேண்டாம் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். இந்நூலில் ஹிந்தி எழுத்துக்களின் உச்சரிப்பிலிருந்து வாக்கிய அமைப்பு வரையில் சுலபமாகவும் தெளிவாகவும் கூறப்பட்டிருக்கிறது.

ஹிந்தியில் விசேஷத் தேர்ச்சி பெற்றவரான ஸ்ரீ ரா. வீழிநாதன் எழுதியிருக்கும் அந்நூலைப் பற்றி விசேஷமாக நாம் ஒன்றும் சொல்லத் தேவையில்லை.

பிரசுரம்: ராகா பிரகாசன் மந்திர், தியாகராய நகர், சென்னை-17. விலை ரூ. 1-0-0.

# 'ஸிஸர்ஸ்'













அணவுக்கு 10
உள்ளூர் வரி சரிப் படுத்தலுக்குட்பட்டது

மூன்று தலைமுறைகளாக
பிரசித்தி பெற்றவை






மிருதுத்
தன்மை பெறுங்கள்!



நீடித்த
இனிமையுடன் இருங்கள்!

புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் கரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம் அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமணமுள்ளது.




## 2. கள்ளிக்கோட்டைத் துறைமுகம்

மிர்ஜா தாவூத்தின் கதையைக் கேளுங்கள் என்று அவன் சொன்னதும் எனக்குக் கதை வெகு சுவாரஸ்யமானதாக இருக்கும் என்று பட்டது. ஆகவே கதையைக் கேட்கக் காதைத் தீட்டி வைத்துக் கொண்டேன். குலாம் காதிரும் கனைத்துக் கொண்டு கதையைத் தொடர்ந்தான் :—

கள்ளிக்கோட்டைத் துறைமுகத்தைப் பற்றித் தாங்கள் கேள்விப் பட்டிருப்பீர்கள். மலையாள நாட்டிலே இது ஒரு சின்னஞ்சிறிய நகரம். ஆனால் மிகவும் அழகுவாய்ந்த நகரம். நகரத்துக்கு மேற்கே மலை இருந்தது. கற்கள் நிறைந்த சமதள பூமி இருந்தது. மேற்கு மலைத்தொடரும் இங்கேதான் இருந்தது. கடல் மார்க்கத்தை விட்டு வேறு மார்க்கமாக இங்கு வருவதென்பது முடியாத காரியம். அந்த நாட்களில் கள்ளிக்கோட்டைத் துறைமுகம் உலகத்தில் உள்ள எல்லா ரஸிகர்களுக்குமே வந்தால் போனால் தங்கும் இடமாக அமைந்திருந்தது.

மஞ்சள் நிறம் படைத்த சீனர்கள், தாமிர வர்ணம் வாய்ந்த வங்காளிகள், இரத்த வர்ணம் படைத்த பாரசீகர்கள், கருநிறம் படைத்த மூர் முதலியவர்கள் அங்கே வந்து போவது உண்டு. சீனாவிலிருந்து பட்டு வரும். பர்மாவிலிருந்து யானைத் தந்தம் வரும். மலாயாவிலிருந்து சந்தனம் வந்திறங்கும். வங்காளத்திலிருந்து பட்டுத் துணிகள், மல்மல் துணிகள், புலித்தோல்கள், அகர்பத்திகள், கர்ப்பூரம் முதலியன வந்திறங்கும். மகதத்திலிருந்து பருப்பும் சர்க்கரையும் வந்து குவியும். மேற்கிலிருந்து துருக்கியர்கள், பாரசீகர்கள், அராபியர்கள் வியாபாரத்தின் பொருட்டு வந்து போய் வண்ணம் இருப்பார்கள். கள்ளிக்கோட்டையின் அரசரான **சாமரி** எல்லாரிடமும் சுங்கம் கப்பம் முதலியன வசூலித்துத் தமது நாட்டை வளமுறச் செய்து வந்தார். அதனால் ஆட்சி முறை நிகரற்று விளங்கிய அவருடைய அரசாங்கத்தில் பஞ்சமோ, அமைதியின்மையோ, அதிருப்தியோ தலைகாட்டவே இல்லை.

மிர்ஜா தாவூத் கள்ளிக்கோட்டை வியாபாரிகளில் மிக மிகப் பிரசித்தமானவர்; பிரபலஸ்தர். அவரிடம் இருபத்தொரு பாய்மரக் கப்பல்கள் இருந்தன. அவை **ஹாங்கோ** நதியிலிருந்து **நீல** நதிவரை வியாபாரத்தின் பொருட்டுப் போய் வந்தன. அவருடைய வியாபாரம் அவ்வளவு பல்கிப் பெருகி வளர்ந்திருந்தது. மிர்ஜா தாவூத் மூர் ஜாதியைச் சேர்ந்தவர். கள்ளிக்கோட்டையில் அவருடைய மாளிகை மூர்ஜாதியினரின் சம்பிரதாயப்படி வெள்ளைக் கற்களால் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. வெகு தூரத்தில் உள்ள மொரொக்கோ தேசத்தில் அவருடைய தந்தை அப்பொழுதும் ஜீவியவந்தராயிருந்தார். ஆனால் மிர்ஜா தாவூத் கள்ளிக் கோட்டையையே தம்முடைய தாய் நாடாக ஆக்கிக்கொண்டு விட்டார். மிர்ஜா தாவூத் மகம்மதியராக இருந்தபொழுதிலும் அவருக்கு ஒரே மனைவிதான். முப்பத்து நான்காவது வயதில் அவருக்கு ஒரு பெண் மகவு பிறந்தது. பெண் மகவு பிறந்த மகிழ்ச்சியில் அவர் ஏழைகளுக்குக் கிட்டத்தட்ட ஆயிரம் தோலாத் தங்கம் இலவசமாக வழங்கினார். இந்தக் கொண்டாட்டம் அவருடைய வீட்டில் மாதக் கணக்கில் நடந்தது. மிர்ஜா தாவூத்தைப் போல் எல்லோருக்கும் நல்லவராக நடந்துகொள்ளும் மதிப்பு வாய்ந்த பெரிய மனிதர்கள் அந்த நகரத்திலேயே வேறு யாரும் கிடையாது என்று சொல்லி விடலாம். உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள், பணக்காரர்கள் ஏழைகள் எல்லோருமே அவரிடம் அன்பும், பக்தியும், சிரத்தையும் கொண்டிருந்தனர். ஏன்! ராஜா சாமரியேகூட அவரைத் தமது நண்பராக மதித்து வந்தார். தொழில் மூலம் மிர்ஜா தாவூத்துக்கு நல்ல லாபம் கிட்டி வந்தது.

கோடை காலத்தில் ஒரு நாள் மாலை வெப்பம் தாளாமல் கடற்கரையில் அந்த நகரத்து மக்கள்

ஏகமாகக் குழுமியிருந்தனர். அஷ்டமிச் சந்திரனைப் போல் அரை வட்டமாக அமைந்திருந்த அந்தத் துறைமுகத்தில், வரும் கப்பல்களைக் கட்டுவதற்காகப் பெரிய இரும்புச் சங்கிலிகள் பிணைக்கப்பட்டிருந்தன. நகர வாசிகள் விதம் விதமான அழகிய ஆடைகள் அணிந்து தங்கள் குழந்தை குட்டிகளுடன் உலாவிக் கொண்டிருந்தனர். சிலர் பாடிக் கொண்டிருந்தனர். சிலர் மகிழ்ச்சி மீறிச் சீழ்க்கை அடித்துக் கொண்டிருந்தனர். வேறு சிலர் கடலில் இறங்கிக் குளித்துக் கொண்டிருந்தனர். மற்றும் சிலர் அலைகளின் ஆனந்த தாண்டவத்தை ரசித்து அநுபவித்துக் கொண்டிருந்தனர்.

அப்பொழுது கரையில் ஒரு கப்பல்கூட இல்லை. சற்றுத் தொலைவில் ஒரு புறத்தில் சின மந்திரவாதி ஒருவன் வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தான். கொஞ்சம் கொஞ்சமாகச் சூரியன் மேலைக் கடலில் மூழ்கிக் கொண்டிருந்தான். இதே சமயம் தொலைவில் நடுக்கடலிலே மூன்று கரிய உருவங்கள் தோன்றின. அவை மூன்றும் மூன்று கப்பல்கள். அம் மூன்று கப்பல்களும் துறைமுகத்தை நோக்கி வந்து கொண்டிருந்தன. அதைக் கடற்கரையில் குழுமியிருந்த எல்லா மக்களும் கண்டனர். அடுத்த கணம் பார்ப்போர்களிடையே அவற்றைப் பற்றி வாதம் வளர்ந்தது. ஒருவன், "அராபியக் கப்பல்கள்!" என்றான். இன்னொருவன், "இல்லை, இவை சீனக் கப்பல்கள்!" என்றான். இருள் கவியத் தொடங்கி விடவே, அவை எந்த நாட்டுக் கப்பல்கள் என்று யாராலும் தீர்மானமாகக் கூறுவதற்கு முடியவில்லை.

மீர்ஜா தாவூத் அப்பொழுது கரையில்தான் இருந்தார். அவர் கண் கொட்டாமல் வரும் கப்பல்களையே பார்த்துக் கொண்டிருந்தார். சிறுகச் சிறுக அவருடைய முகபாவத்திலே ஒரு பதற்றக் குறி தென்பட்டது. அவர் தெளிவற்ற குரலில் நடுக்கத்துடன், "இவை போர்த்துகீசியக் கப்பல்கள் அல்லவா! இப் பரங்கியர்கள் இங்கே எவ்வழியே வந்தார்கள்!" என்றார்.

மறுநாள் காலை மீர்ஜா தாவூத் துறைமுகத்துக்குப் போய்ப் பார்த்தார். அநேக அயல் நாட்டவர்களைச் சூழ்ந்து கொண்டு நகரத்து மக்கள் நின்று கொண்டிருந்தனர். பரங்கியர்கள் யாருக்கும் புரியாத பாஷையில் என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தார்கள். யாருக்கும் அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பது விளங்கவில்லை. மக்களோ தங்கள் நாட்டுப் பாஷையில் அவர்களைக் கேள்விகளுக்கு மேல் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தனர். அதைப் பார்த்த மீர்ஜா தாவூத் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு முன்னேறினார். அவரைப் பார்த்த நகர வாசிகள் நகர்ந்து அவருக்கு மரியாதையுடன் வழி விட்டனர்.

வந்தவர்களில் ஒருவன், "இங்கே போர்த்துகீசிய மொழி தெரிந்தவர்கள் யாருமே இல்லையா!" என்று கேட்டான். "நாங்கள் ஜாமரினைச் சந்திக்க விரும்புகிறோம். எங்களுக்கு உதவி புரிய யாராவது துபாஷி, அதாவது இரு மொழி அறிந்தவர்கள் கிடைப்பார்களா!" என்றும் கேட்டான்.

மீர்ஜா தாவூத் பேசியவனைப் பார்த்தார். விசாலமான தேகம். உலையில் காய்ந்த தங்கம் போன்ற நிறம். நீண்ட பொன்னிறக் கேசங்கள். களை பொருந்திய அழகிய முகம். இடுப்பில் உடைவாள் தொங்கிக் கொண்டிருந்தது. வெல்வெட்டு உடை அணிந்து அவன் தன் தோழர்களுக்கு மத்தியில் கன கம்பீரமாக நின்று கொண்டிருந்தான். அவனைத் தலைவன் என்று எண்ணி மீர்ஜா தாவூத் அவனை வைத்த கண் வாங்காமல் சிறிது நேரம் பார்த்தார். பிறகு, "எனக்குப் போர்த்துகீசிய பாஷை தெரியும்" என்றார்.

புதிதாக வந்த அவன் சிறிதும் நேரம் வரை கண் இமைக்காமல் மீர்ஜா தாவூத்தையே பார்த்துவிட்டு, "உன்னைப் பார்த்தால் மூர் என்றல்லவா தோன்றுகிறது!" என்றான்.

அவன் சொன்ன அந்தச் சொற்களில் தொனித்த வெறுப்பு உணர்ச்சியைச் சொல்லி முடியாது. அதை உணர்ந்த மீர்ஜா தாவூத்தின் உள்ளத்திலும் துவேஷ உணர்ச்சி குடிகொண்டது. ஆயினும் அமைதியான குரலில், "ஆம். நான் மூர் தான். உங்களைப் பார்த்தால் போர்த்துகீசிய நாட்டைச் சேர்ந்த கடற் கொள்ளைக்காரர்கள் போலத் தோன்றுகிறதே!......எனக்குப் பரங்கியர்களிடம் சிறிதும் அநுதாபம் கிடையாது. ஏனெனில் உங்கள் ஜாதியைப் பற்றியும் ஜாதிக் குணத்தைப் பற்றியும் எனக்கு நன்கு தெரியும்!" என்றார்

அப்பொழுது வயதிற் சிறியவனான ஒரு போர்த்துகீசியன், "எங்களுக்கும் இந்த மூர்



காய்களிடம் அநுதாபம் கிடையாது. அவர்களைக் கண்ட இடத்தில் கொன்று போடுவதைத் தான் நாங்கள் எங்கள் தர்மமாகக் கொண்டிருக்கிறோம்!" என்றான் வாளை உருவியபடியே.

கண் இமைக்கும் நேரத்துக்குள்ளாகக் கத்தியை உருவிக்கொண்டு மிர்ஜா தாவூத் சண்டைக்குத் தயாராகி விட்டார். ஆனால் அதே சமயம் வந்தவர்களுக்குத் தலைவனானவன் கைதூக்கி அவரைச் சாந்தப்படுத்தி மிகவும் அடக்கமான குரலில், "ஐயா! என்னுடைய இந்த முரட்டுத் தோழனின் தவறைத் தாங்கள் தயவு செய்து மன்னிக்க வேண்டும். தாங்களோ மூர். நாங்களோ போர்த்துகீசியர்கள். நாங்களும் தங்களைப் போல் வியாபாரிகள் தாம்; தொழிலாளிகள் தாம். கடற் கொள்ளைக்காரர்கள் அல்ல. வெளியிடங்களில் எங்கள் விவகாரம் எப்படி யிருந்தபோதிலும், நாங்கள் இங்கே மனக்கசப்பை வளர்த்துக் கொள்ள விரும்பவில்லை. ஆனால் தங்கள் கருணையைப் பெற்று என்றென்றும் தங்களுக்குக் கடமைப் பட்டவர்களாகவே இருக்க விரும்புகிறோம்" என்றான். பிறகு தன் தோழன் பக்கம் திரும்பி, "பெட்ரோ! இனி வருங்காலத்தில் எப்பொழுதாவது நீ இம்மாதிரி நடந்து கொள்ளும் வகையறியாமல் தாறுமாறாக நடந்து கொண்டால், உன்னை நாய்களுக்கு இரையாக்கி விடுவேன். ஜாக்கிரதை!" என்று எச்சரித்தான்.

அச்சத்தினால் பெட்ரோவின் முகம் வெளிறி விட்டது; 'சுரத்' இறங்கி விட்டது. ஆயினும் அவன் தன் எதிர்ப்பையும் வெறுப்பையும் காட்டும்



குரலில், "நான் உண்மையைச் சொல்லும் விஷயத்தில் யாருக்கும் அஞ்ச முடியாது. ஒவ்வொரு மூர் ஜாதியினனும் என் வெறுப்புக்கான பாத்திரமேதான். நீங்களேகூட மூர் ஜாதியைப் பற்றி......" என்று ஆரம்பித்தான்.

அவன் தன் வாக்கியத்தை முடிப்பதற்குள்ளாகத் தலைவன் ஒரே தாவாகத் தாவி அவன் தொண்டையை அழுத்திப் பிடித்து விட்டான். சிறிது நேரம் அவன் அப்படி அழுத்திப் பிடித்துக் கொண்டிருக்கவே, பெட்ரோ மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்துவிட்டான். அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல், அக்கூட்டத்தின் தலைவன் மிர்ஜா தாவூத்தைப் பார்த்து, "இம்மாதிரித் தண்டனைதான் பொய் பேசுபவர்களுக்கு அளிக்க வேண்டும்....தாங்கள் தயவுசெய்து இப்பொழுது எங்களது இந்தச் செய்தியை ஜாமரின் வரை கொண்டு சேர்ப்பதாயிருந்தால், நாங்கள் தங்களுக்கு மிகவும் நன்றி செலுத்துவோம்" என்றான்.

இதைச் சொல்லி முடித்ததும் அவன் தன் தலைத் தொப்பியைக் கழற்றிக் கையில் எடுத்துக் கொண்டு, தரைவரை குனிந்து தலை வணங்கினான்.

மக்கள் வாய் திறவாமல் இந்த நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மிர்ஜா தாவூத் வந்தவனின் வாய் வார்த்தைகளில் மயங்கி விடவில்லை. மெதுவான குரலில், "பரங்கியச் சகோதரா! நீ வெகு வெகு சாமர்த்தியசாலிதான்...ஆமாம், சாமரியின் ராஜ்யத்தில் நீ எதற்காக வந்திருக்கிறாய் என்பதை விவரமாகக் கூற முடியுமா?" என்று கேட்டார்.

"எதற்காகவா? வியாபாரத்தின் பொருட்டுத்தான்!"

"பரங்கிய நண்பனே! உங்களைப் பற்றி எனக்கு வெகு நன்றாகத் தெரியும். கலகம் விளைவிப்பதுதான் உங்கள் தொழில், வியாபாரம் எல்லாம். பேராசைதான் உங்களுடைய தர்மம். பிறர் சொத்தைச் சுவீகரித்துக் கொள்வதுதான் உங்களுடைய பிறப்பியல்பு; ஜாதிக் குணம். எங்கள் ராஜ்யத்தில் கலகமோ துவேஷமோ தலை காட்டினதில்லை. இங்கே நாங்கள், அதாவது ஹிந்துக்கள், பௌத்தர்கள், முகம்மதியர்கள், ஹிப்ருக்கள் எல்லோரும் ஒற்றுமையாகவும் அமைதியாகவும் வியாபாரம் நடத்தி வருகிறோம். எங்களிடம் இதுவரை சண்டை பூசல் எழுந்ததில்லை. உண்மையைச் சொல். நீங்கள் இங்கே இந்தியாவுக்கு வருவதன் முக்கிய நோக்கம் என்ன?" என்று சிறிதும் ஒளிவு, மறைவின்றி அவனைக் கேட்டு விட்டார் மிர்ஜா தாவூத்.

பரங்கியனின் முகம் ஒரேயடியாகக் கறுத்து விட்டது. அவனுடைய விழிகளிலிருந்து ஹிம்சைத் தீ பறந்தது. ஆயினும் அவன் வெகு சாமர்த்தியமாகத் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு, தங்கச் சூலத்தைத் தலை வரையில் தூக்கி, "நான் இந்தச் சிலுவையின் ஆணையாகச் சொல்கிறேன். நல்லெண்ணத்துடன் வியாபாரம் செய்வதுதான் எங்கள் உண்மையான நோக்கம்" என்றான்.

சில நிமிஷங்கள் வரை அவன் உள்ளத்தை அளப்பவர் போல உற்றுப் பார்த்துவிட்டு, "சரி, நான் உன் வார்த்

தையைப் பூரணமாக நம்பி எங்கள் நாட்டு அரசர் சாமரியிடம் உன்னை அழைத்துப் போகிறேன், வா!" என்றார் மீர்ஜா தாவூத்.

அரண்மனையை அடைந்த போர்த்துகீசியத் தலைவன் சாமரி மன்னருக்கெதிரே, முழங்கால்களை மண்டியிட்டு வணங்கியபின் அவருடைய தொங்கும் வஸ்திரங்களைத் தொட்டு முத்தமிட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான். பிறகு மிகவும் வினயமான குரலில், "என் பெயர் வாஸ்கோ டி காமா. நான் போர்த்துகீசிய மன்னரிடமிருந்து வந்திருக்கும் ராஜதூதன். கள்ளிக்கோட்டையில் வியாபாரம் செய்வதற்குத் தாங்கள் எங்களுக்குத் தயவு செய்து அநுமதி வழங்க வேண்டும்" என்றான். அதைச் சொல்லி முடித்ததும், போர்த்துகீசிய அரசாங்கத்தின் சார்பில், தான் கொண்டு வந்துள்ள அன்பளிப்புப் பொருள்களை சாமரி மன்னருக்கெதிரே வைத்தான்.

என்ன இருந்தாலும் மீர்ஜா தாவூத்தின் மனத்தில் மட்டும் அவநம்பிக்கையும் சந்தேகமும் கோடிட்டன. ஏனெனில் ஒவ்வொரு மூருக்கும் பரங்கியர்களைப் பற்றி நன்கு தெரியும். பணத்தாசையும் பொருளாசையும்தான் பரங்கியர்களின் ஜீவ நாடி. தன்னலத்துக்காக அவர்கள் எதுவும் செய்யத் தயங்க மாட்டார்கள் என்பதையும் மூர் ஜாதியினர் உணர்ந்திருந்தனர். போர்த்துகீசியாவிலிருந்து பாரத தேசம்வரை, ஆப்பிரிக்காவைச் சுற்றிக் கொண்டு இன்றுவரை கடல் மார்க்கமாக யாருமே வந்ததில்லை. வாஸ்கோ டி காமாதான் ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்கு வரும் முதல் பிரயாணி. அவன்தான் இந்தப் புது மார்க்கத்தைக் கண்டு பிடித்தவனுங்கூட. எவ்வளவு முயன்றும் அவனுடைய உண்மையான நோக்கம் என்ன என்பதை யாராலும் கண்டு பிடிக்க முடியவில்லை. ஏனெனில் முரடனும், கசப்பாகப் பேசியவனுமான பெட்ரோவுக்குத் தண்டனை கொடுத்து அவன் தன் அந்தரங்கமான நோக்கத்தை அடியோடு மூடி மறைத்து விட்டான். மீர்ஜா தாவூத்துக்கு இந்த ரகசியத்தைப் புரிந்து கொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை. ஆகவே, அவருடைய உள்ளம் சம்சயத்தினால் குழம்பியது.



தைல வியாபாரி:—என்ன, கணக்குப்பிள்ளை! தைலத்துக்கு விளம்பரம் எப்படி எழுதினீர்கள்?

கணக்குப் பிள்ளை:— "உங்கள் மூளையைக் குளிரச் செய்யும் தைலத்தை உபயோகியுங்கள். மூளைக்கு மிகவும் நல்லது" என்று எழுதி யிருக்கிறேன்.

வியாபாரி:—குறிப்பு என்று போட்டு மூளை இல்லாதவர்களும் உபயோகிக்கலாம் என்று எழுதுங்கள்!

அவருக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டால் மட்டும் ஆயிற்று காரியம்! மன்னரின் மனத்தில் சந்தேகம் உதித்தால் அல்லவா அவர் ஏதாவது நடவடிக்கை எடுப்பதற்கு! எனவே, போர்த்துகீசியர்கள் கள்ளிக் கோட்டையில் தங்கி விட்டார்கள். அவர்களுடைய வியாபாரமும் சிறுகச் சிறுக ஓங்கியது. சாதாரணப் பொருள்களைக்கூட அவர்கள் இரண்டு மூன்று மடங்கு அதிக விலை கொடுத்து வாங்கினார்கள். இதனால் பொது மக்கள் மகிழ்ச்சியுற்றனர். தங்கள் பொருள்களுக்கு நாலு காசு கூடக் கிடைக்கிறதென்றால் யாருக்குமே மகிழ்ச்சி ஏற்படுவது இயல்புதானே! ஆனால் மீர்ஜா தாவூத்துக்கு மட்டும் இதில் ஏதோ சூழ்ச்சி இருக்க வேண்டும் என்று தான் தோன்றியது. அவருக்கு மட்டும் அல்ல; எல்லா வியாபாரிகளுக்குமே இதில் ஏதோ மோசக் கருத்து இருப்பதாகத்தான் பட்டது.

இப்படியே நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. கள்ளிக்கோட்டையில் முன்போலவே அமைதி ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது. இலையுதிர் காலத்தில் ஒருநாள் இரண்டு கப்பல்கள் கள்ளிக் கோட்டையை நோக்கி வந்தன.

சிறிது நேரத்துக்கெல்லாம் வங்க நாட்டிலிருந்து பிரபாகர சிரேஷ்டியின் இரண்டு கப்பல்கள் துறைமுகத்துக்கு வந்திருக்கின்றன என்னும் செய்தி நகரமெங்கும் பரவிவிட்டது. பிரபாகர சிரேஷ்டி பெரும் வியாபாரிகளில் ஒருவர். கள்ளிக்கோட்டைக்கு வருஷா வருஷம் லட்சக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள துணிமணிகள் கொண்டு வருவது அவருடைய வழக்கம். காச்மீரச் சால்வைகள், பனாரஸ் பட்டுப் புடவைகள், வங்காளத்துப் பட்டு, வெல்வெட்டு ஆகிய பொருள்களை அவரிடமிருந்து வாங்கிக் கொள்வதற்காக வியாபாரிகளிடையே பலத்த போட்டியே எழுந்து விடுவது உண்டு. அவர் கொண்டு வருவது போன்ற பொருள்களை வேறு எந்த வியாபாரியுமே கொண்டு வந்ததில்லை; வருவதும் இல்லை. துறைமுகத்தில் வந்திறங்கியதும் மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டனர்.

பிரபாகரை வரவேற்ற பெரிய வியாபாரிகளில் ஒருவரான ஹிப்ரு மூஸா இப்ராஹிம் என்பவர், "இந்தத் தடவை நீங்கள் வருவதற்குத் தாமதம் ஏற்படவே, வழியில் முதலைகள் உங்களை உணவாக்கிக் கொண்டு விட்டனவோ என்று எண்ணினேன்" என்றார்.

அதற்குப் பிரபாகர் சிரித்துக் கொண்டே, "மூஸா ஸாஹேப்! அப்படியே என்னை முதலைகள் விழுங்கி யிருந்தாலும், அவற்றால் என்னை ஜீரணிக்க முடியுமோ, என்னவோ சந்தேகந்தான்" என்று கூறி மற்றொரு பக்கம் திரும்பினார். மீர்ஜா தாவூத் நின்று கொண்டிருப்பதைக் கவனித்ததும், "ஓஹோ! மீர்ஜா ஸாஹேபா! ஆதாப் அர்ஜ்! என்ன, சுகம்தானே! நீங்கள் கேட்ட பொருள்களெல்லாம் இந்தத் தடவை கொண்டு வந்திருக்கிறேன். எவ்வளவு வாங்குகிறீர்கள் என்பதைப் பார்க்க வேண்டும்......அட, இது என்ன இது! உங்கள் இடுப்பில் புது உடை வாள் தொங்கிக் கொண்டிருக்கிறதே! இது இந்த ஊர் வாளோ! எனக்கும் ஒரு ஜோடி வேண்டும். கௌட தேசத்து மகாராஜாவுக்குக் கொண்டு வந்து தருவதாக வாக்களித்து வந்திருக்கிறேன். இம்மாதிரி வாள் எங்கு கிடைக்கிறது, சொல்லுங்கள்!...சரி, இதைப் பற்றி யெல்லாம் அப்புறம் பேசிக் கொள்ளலாம். வீட்டில் எல்லாரும் நலம்தானே!" என்று கேட்டவாறே மீர்ஜா ஸாஹேபை ஆலிங்கனம் செய்து கொண்டார்.

(தொடரும்)




பரிசுக் கதை: ஓரயி பீன்பர்க் (டென்மார்க்) மொழிபெயர்ப்பு: வாஞ்சி

டேவிடின் தேகம் முழுவதையும் எரித்துக் கொண்டிருந்த மனவேதனைக்கு வாத்திய கோஷ்டியின் இன்னிசை அருமருந்தாக இருந்தது. எனவே அவன் கண்களை மூடிக் கொண்டான். சோகம் படர்ந்திருந்த அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. தான் ஆகாயத்தில் பறந்து செல்லுவது போல் தோன்றியதே அவனது ஆனந்தத்துக்குக் காரணம்.

ஆனால் சங்கீதம் நின்றதும் டேவிட் மறுபடியும் இந்த உலகத்துக்கு வந்தான். சொர்க்கத்திலிருந்து திடீரென்று நரகத்தில் தள்ளப்பட்ட மனிதனின் மனம் என்ன பாடுபடும்? அது போல் டேவிடின் மனம் அனலில் விழுந்த புழுவாய்த் துடித்தது.

*　　　*　　　*

அன்று பாலஸ்தினத்தைச் சேர்ந்த ஜாபா நகரைக் கொஞ்சம் கொஞ்சமாக இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. இரவு ஆக ஆகத் துறைமுகத்தில் அலைகளின் ஒலி அதிகமாகிக் கொண்டிருந்தது.

மாலை நேரம் முழுதும் ஆனந்தமாக வாத்திய சங்கீதத்தை அனுபவித்துக் கொண்டிருந்த டேவிடின் செவிகளுக்கு, மத்திய தரைக் கடல் அலைகளின் ஓசையும் இயற்கையின் இன்னிசையாகவே தோன்றியது.

அது யுத்த காலமானதால் எங்கும் அமைதி நிலவியது. ஒரு சில அராபியச் சிறுவர் சிறுமியர் மாத்திரம் வீட்டுத் தாழ்வாரைகளில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். யுத்தத்தின் கொடுமையை அவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. மற்றவர்களைப் போல் விவரம் தெரியாத அக் குழந்தைகளின் மனம் திகிலால் அல்லல்படவில்லை.

ஜாபாவிலிருந்த முப்பதாயிரம் ஜனங்களில் பெரும்பாலோரும் போருக்குப் பயந்து எகிப்து, லெபனன் முதலிய இடங்களுக்கு ஓடி விட்டதால், நகரின் பெரும்பகுதியும் மனித சஞ்சாரமற்றிருந்தது. எப்போதாவது யூதர் இராணுவப் போலீஸ் செல்லும் ஜீப் மோட்டாரைத் தவிர வேறு எவ்விதச் சந்தடியும் கேட்க வில்லை.

மனித சஞ்சாரமற்ற கட்டிடங்களுக்கு இடையே, ஒரு கட்டிடத்தில் மாத்திரம் இருபத்துநாலு மணி நேரமும் கூக்குரலும் சந்தடியும் காதைத் துளைத்தன. அது இராணுவ ஆஸ்பத்திரியானதால் காயமடைந்த சிப்பாய்களின் ஓலம் பரிதாபமாக இருந்தது.

காலை இழந்தவர்கள், கையை இழந்தவர்கள், மண்டை உடைந்தவர்கள், தேகம் முழுதும் கட்டுப் போட்டுக் கொண்டிருந்தவர்கள் இவர்களின் காட்சி யுத்தத்தின் கொடுமையை விதர்சனமாக எடுத்துக் காட்டியது.

அவர்களுடைய ஓலம் காதைத் துளைத்தது போல், மருந்துகளின் நாற்றம் மூக்கைத் துளைத்தது. எனவே அந்த ஆஸ்பத்திரிக்குச் செல்வோர் எவரும் அருவருப்படையாமல் திரும்ப முடிவதில்லை.

எனினும் அத்தகைய சூழ்நிலையில் நர்சுகளின் அரிய தொண்டு சிப்பாய்களுக்கு ஆறுதலும் இன்பமும் அளிப்பதாக இருந்தது.

நர்சுகள் மிகவும் சுத்தமாக இருந்தனர். கண்களைப் பறிக்கும் சுத்த வெண்மையான உடைகளை உடுத்திக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய சரீரம் மிகவும் மிருதுவாகவும் வசீகரமாகவும் இருந்தது. நோய்க்கு மத்தியில் அவர்கள் ஆரோக்கியமே உருவெடுத்தவர்கள் போல் காணப்பட்டனர். அவர்கள் ஆஸ்பத்திரியில் அங்கும் இங்கும் சென்றபோது, அவர்களுடைய கூந்தல்களிலிருந்து நறுமணம் வீசிக் கொண்டிருந்தது. எனவே, அவர்களைக் கண்டபோதெல்லாம் காயம் அடைந்த சிப்பாய்கள் தங்களுடைய வலியையும் வேதனையையும் சிறிது மறந்திருந்ததில்

ஆச்சரியம் இல்லை: அவர்களுடைய கண்களில் ஒளி வீசியதிலும் வியப்பு இல்லை.

* * *

தன் படுக்கைக்கு அருகில் நர்ஸ் ஜிஹாவா வந்ததும் சோர்ந்திருந்த டேவிடின் முகம் மலர்ந்தது. ஜிஹாவா அவன் அருகில் வந்து, அவனுக்கு ஜுரம் அடிக்கிறதா என்று பார்ப்பதற்காக அவன் போர்வையை அப்பால் எடுத்தாள். அப்போது அவளுடைய கை டேவிடின் மேல் பட்டது. டேவிட் அப்படியே பரவசம் அடைந்தான்.

"ஜிஹாவா! எனக்கு ஜுரம் எதுவும் இல்லை. இருந்தாலும் நீ இங்கு இருக்கும் வரையில் நானும் இங்கேயே இருக்க ஆசைப்படுகிறேன். எனக்குக் காலில் இப்போது வேதனை எதுவும் இல்லை. இனி நீ என் மனவேதனையைத் தான் போக்க வேண்டும்."

இவ்விதம் சொல்ல வேண்டும் என்று எண்ணினான் டேவிட். ஆனால் அவனுக்கு அப்படிச் சொல்லுவதற்கு நாக்கு எழவில்லை.

டேவிட் சங்கீதப் பிரியன் என்பது ஜிஹாவாவுக்குத் தெரியும்.

"இன்றிரவும் நீ தோட்டத்துக்குப் போகலாம். அங்கு இன்றைக்கும் சங்கீதக் கச்சேரி உண்டு" என்றாள் ஜிஹாவா.

"எனக்கு ஜுரம் எப்படி இருக்கிறது? என் உடம்பைத் தகிக்கிறதே!" என்றான் டேவிட். அவளுடன் ஏதாவது பேச்சுக் கொடுக்க வேண்டும் அல்லவா?

டேவிட் அவ்விதம் கூறியதற்கு அர்த்தம் என்ன என்பது ஜிஹாவாவுக்குத் தெரியும். அவளுடைய முகத்தில் வசீகரமான புன் முறுவல் தவழ்ந்தது.

"ஜுரம் இல்லை. நீங்கள் இரவு சுக்குரா விடுவதை நிறுத்தினால், இன்றைக்கு வேண்டுமாயினும் நீங்கள் ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறி விடலாம். ஏற்கெனவேயே நீங்கள் இங்கு வந்து அதிக காலம் ஆகிவிட்டது என்பது அதிகாரிகளின் அபிப்பிராயம்" என்று விவரித்தாள் ஜிஹாவா.

ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறுவதா? அதை டேவிடால் கற்பனை செய்து கொள்ளவும் முடியவில்லை.

சாதாரணமாக இராணுவ ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுவோர் தாங்கள் குணமடைந்து வெளியேறும் காலத்தை ஆர்வத்துடன் எதிர்நோக்கிக் கொண்டிருப்பார்கள். டேவிடும் அப்படியே தான் வெளியேறும் தினத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால் நர்ஸ் ஜிஹாவாவைப் பார்த்ததிலிருந்து அவன் மனம் முற்றிலும் மாறி விட்டது. போதாக் குறைக்கு ஜிஹாவாவின் அன்பும் இனிய பேச்சும் அவனைப் போதை கொள்ளும்படி செய்து விட்டன.

ஜிஹாவா அவ்வாறு கூறியதும் டேவிட் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான்.

"இங்கிருந்து வெளியேறிய பின் நான் எங்கு போவது? என்ன செய்வது?" என்று அவன் ஏக்கத்துடன் கேட்டான்.



"உனக்கு அதிகாரிகள் ரஜா கொடுத்து, உன்னைத் தான்யாவுக்கு வடக்கே உள்ள கடற்கரைப் பிரதேசத்துக்கு அனுப்புவார்கள். மிகவும் கடுமையாகக் காயமடைந்தவர்களை அதிகாரிகள் அவ்விடத்துக்குத் தான் அனுப்புவது வழக்கம். காயமடைந்தவர்கள் ஓய்வு எடுத்துக் கொள்வதற்கு அதுதான் சிறந்த இடம்" என்றான் ஜிஹாவா.

அப்படியானால் டேவிட் ஆஸ்பத்திரியில் இருப்பதை ஜிஹாவா விரும்பவில்லையா? அப்படியானால் அவனது வார்த்தைகளில் ஏன் அவ்வளவு சோகம் ததும்ப வேண்டும்?

"நான் எவ்வளவு காலம் அந்தக் கடற்கரைப்பிரதேசத்தில் இருக்க வேண்டுமாம்?"

"அது டாக்டர் தீர்மானிக்க வேண்டிய விஷயம். மூன்று வாரங்கள் இருக்க வேண்டும் என்று டாக்டர் கூறலாம். ஆறு வாரம் இருக்கும்படியும் நேரிடலாம்!"

"அப்புறம் என்ன செய்வது?" என்று கேட்டான் டேவிட்.

"அப்புறம் என்ன செய்வது?" என்ற கேள்வியே ஜிஹாவாவின் வாயிலிருந்தும் வந்தது. அவன் டேவிடையே வைத்த கண் வாங்காமல் உற்றுப் பார்த்தான்.

"நீங்கள் டெல் அவிவ், ஹைப்பா, ஜெருசலம் முதலிய எந்த நகருக்காவது சென்று வேலை செய்ய வேண்டியதுதான். உங்களுக்குச் சிப்பாய் வாழ்க்கை இத்துடன் முடிந்து விட்டது. நீங்கள் இனி வேறு ஏதாவது வேலையில் ஈடுபட்டுப் புது வாழ்க்கையைத் தான் ஆரம்பிக்க வேண்டும். புதிய தேசத்தில் புதிய வாழ்க்கையை ஆரம்பிப்பது பொருத்தம்தானே?"

இவ்விதமெல்லாம் டேவிடுக்கு ஆறுதல் கூற வேண்டும் போலிருந்தது ஜிஹாவாவுக்கு. எனினும் அவன் ஒன்றுமே கூறவில்லை.

ஜிஹாவா என்னவெல்லாம் கூற விரும்பினான் என்பதை டேவிட் ஒருவாறு ஊகித்து அறிந்து கொண்டான்.

"இந்த முடவனுக்கு இந்தத் தேசத்தில் என்ன வேலை கிடைக்கப் போகிறது? மோட்டார்கள் ஓட்டவும், சோளங்களை அறுவடை செய்யவும் திடகாத்திரமாக இருப்பவர்களையே விரும்புவார்கள். முடவர்கள் என்ன வேலை செய்ய முடியும்?" என்று சொல்ல வேண்டும் போலிருந்தது. ஆனால் அவனும் வாயைத் திறந்து தன் மனதில் ஓடும் எண்ணங்களை வெளியிடவில்லை.

ஜிஹாவா ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தான். ஓர் யந்திரத்தைப் போல், நோயாளியான டேவிடைப் பற்றிய விவரங்கள் அடங்கிய அட்டைக் காகிதத்தில் அவனது அன்றைய உடல் நிலையைப் பற்றி ஏதோ குறித்தான்.

"வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளாதீர்கள்" என்று கூறிவிட்டு ஜிஹாவா அவ்விடத்தை விட்டுச் செல்ல முற்பட்டான்.

"ஜிஹாவா!" என்றுகூப்பிட்டான் டேவிட்.

"ஏன்?"

"இன்றிரவு நடக்கும் வாத்திய கோஷ்டிக் கச்சேரிக்கு நீயும் வருவாயா?"

"கேட்க வேண்டுமா? நிச்சயமாக வருகிறேன், டேவிட்!"

"மேற்படி கச்சேரி வெகு நேரம் நடக்குமா?" என்று கேட்டான் டேவிட்.

"வெகு நேரம் உன்னைப் பிரியாமல் இருக்க முடியுமா?" என்ற கேள்வியையே டேவிட் அவ்விதம் வேறு விதமாகக் கேட்டான்.

"வெகுநேரம் நடக்கும் என்றே தோன்றுகிறது" என்றான் ஜிஹாவா.

"ஜிஹாவா, உன்னிடம்......"

இச் சந்தர்ப்பத்தில் மறுகோடியில் படுத்துக் கொண்டிருக்கும் சாமுவல் வீறிட்டு அலறினான். உடனே ஜிஹாவா அவன் இருக்கும் இடத்துக்கு விரைந்து சென்றான்.

ஒரு மணி, இரண்டு மணிக்கு ஒரு தடவை சாமுவல் அவ்விதம் வீறிட்டுக் கத்துவது வழக்கமாகி விட்டது.

அவனுக்கு இரண்டு கைகளிலும் எஃகுக் கம்பியை வைத்துக் கட்டுப் போட்டிருந்தார்கள். அவன் கைகளை இழந்து விடாமல் இருக்க டாக்டர்கள் பெரு முயற்சி செய்து வந்தனர். அவர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். இது வரையில் அவர்கள் எத்தனை பேர்களுடைய கைகளையும் கால்களையும் காப்பாற்றி யிருக்கிறார்கள், தெரியுமா?

ஜிஹாவா திடீரென்று சென்றதும் டேவிடின் வேதனை பன்மடங்கு அதிகமாயிற்று.



ஒருவர் (பர பரப்புடன்) :—டாக்டர், என் உயிருக்கு ஆபத்து வந்து விட்டது! என்னைக் கொஞ்சம் தயவு செய்து உடனே கவனியுங்கள்!

டாக்டர் :—என்ன ஐயா, சமாசாரம்?

அவர் :—நான் முந்தா நாள் ஒரு பேனா வாங்கினேன். கடைக்காரன் நான் உயிருடன் இருக்கும் வரையில் அந்தப் பேனா உழைக்கும் என்றான். இன்று அந்தப்பேனா உடைந்து விட்டது. நான் என்ன செய்வேன்? உயிர் போய் விடுமா, டாக்டர்?

ஜிஹாவா தன்னை விட்டுப் போவதற்குக் காரணமாக இருந்த சாமுவல் மீது டேவிடுக்குக் கோபம் உண்டாயிற்று. எனினும் அடுத்த விநாடி அவன் கோபம் மறைந்து விட்டது. சாமுவல் மீது அனுதாபமே உண்டாயிற்று. "பாவம், சாமுவல்!" என்று முணு முணுத்தான் டேவிட்.

* * *

சூரியன் அஸ்தமித்து இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. சாமுவல் சிணுங்கிக் கொண்டிருந்தான். தோட்டத்தில் நடைபெறப் போகும் கச்சேரிக்குப் போக வேண்டும் என்று அவன் துடித்தான். அவன் செல்லுவதற்கு டாக்டர்கள் அனுமதித்தாலும் அவன் எப்படி எழுந்து செல்ல முடியும்?

சில சிப்பாய்களுக்குப் படுக்கையில் இருந்தபடியே கச்சேரி நடக்கு மிடத்தைப் பார்க்க முடியும். எனவே, அவர்கள் மாத்திரம் தோட்டத்துக்குச் செல்லாமலேயே கச்சேரியை அனுபவிக்க ஆயத்தமாயினர்.

ஊன்றுகோல் கட்டைகளின் உதவியால் டேவிடுக்கு நடக்க முடியும். எனவே அவன் தோட்டத்தில் உள்ள ஒரு மேடையில் போய் உட்கார்ந்தான். அவனைப் போல் மற்றும் பலர் கட்டைகளை ஊன்றிக் கொண்டு அங்கு வந்தனர். பரிதாபகரமான அந்தக் காட்சி அவன் மனத்தை என்னவோ செய்தது.

தோட்டம் குளிர்ச்சியாக இருந்தது. எனவே அங்கு உட்கார்ந்திருப்பது டேவிடுக்கு ஆனந்தமாக இருந்தது. இருந்தாலும் அவனது ஆனந்தத்துக்கு உண்மையான காரணம், சிறிது நேரத்தில் ஜிஹாவா அவ்விடத்துக்கு வருவாள் என்ற எண்ணம்தான்.

"டேவிட், உங்களுக்கு உடம்பு எப்படி இருக்கிறது?" என்று கேட்டுக் கொண்டே ஜிஹாவா வந்து சேர்ந்தாள்.

"பாலஸ்தீன் வாத்திய கோஷ்டியினர் வாசிக்கப் போகிறார்கள். இவர்கள் ஐரோப்பாவில் பிரசித்தி பெற்றவர்கள். இத்தாலிய சங்கீத நிபுணரான டாஸ்கானினி கூட இதில் பங்கெடுத்துக் கொள்வது உண்டு" என்று இரண்டொரு சிப்பாய்கள் பேசிக் கொண்டிருந்தது டேவிடின் காதில் விழுந்தது.

"இந்தக் கோஷ்டியினர் அவ்வளவு கெட்டிக்காரர்களா?" என்று கேட்டான் டேவிட்.

"ஆமாம்" என்றாள் ஜிஹாவா.

ஜிஹாவா வாத்திய கோஷ்டியினரைப் பார்த்துக் கொண்டிருந்தாள். டேவிடோவெனில் ஜிஹாவாவையே பார்த்துக்கொண்டிருந்தான். அவள் தன் அருகில் நின்று கொண்டிருந்ததால் டேவிட் தன்னுடைய சரீர வேதனை, மன வேதனை எல்லாவற்றையும் அடியோடு மறந்திருந்தான்.

கச்சேரி ஆரம்பமாயிற்று. இந்தச் சங்கீதத்துக்குத் தான் எவ்வளவு சக்தி! அதனால் தோட்டம் வர வரப் பெரிதாயிற்று. மரங்கள்



"மூன்று மாதங்களுக்கு முன்னால் என்னிடம் ஒரு கார் விற்றீரே, ஞாபகம் இருக்கிறதா?"

"ஆகா, ஞாபகம் இருக்கிறது!"

"விற்கும் போது நீர் என்ன சொல்லி என்னிடம் விற்றீர்? மறுபடியும் சொல்லும்?"

"ஏன், ஸார்?"

"நான் அந்தக் காரை இன்னொருவருக்கு விற்கப் போகிறேன். அந்தப்புகழ் வாசகங்கள் தெரிய வேண்டும்!"

வானளாவ வளர்ந்து கொண்டே போயின. அது போல் ஜிஹாவாவின் ஹிருதயமும் பெரிதாகுமா? அதில் தனக்கு இடம் கிடைக்குமா என்று எண்ணினான் டேவிட். வாத்திய கோஷ்டியின் இனிய கீதம் டேவிடுக்குத் தான் வானவெளியில் பறப்பது போன்ற இன்பத்தை உண்டாக்கியது. மேற்படி கீதம் வானத்துக்குச் சென்று நட்சத்திர தீபங்களை ஏற்றியதாக அவனுக்குத் தோன்றியது. அந்த இனிய சங்கீதம் சொர்க்க லோகத்தையே பூமிக்குக் கொண்டு வந்து விட்டதாக எண்ணினான் டேவிட்.

சங்கீதம் நின்றது. டேவிட் சொர்க்க லோகத்திலிருந்து கீழே விழுந்தான்!

தோட்டத்திலேயே சோகத்துடன் உட்கார்ந்து கொண்டிருந்த டேவிடுக்கு ஜிஹாவா ஆறுதல் கூறினாள். "மனத்தை அலட்டிக் கொள்ளாதீர்கள்" என்றாள்.

மனத்தை அலட்டிக் கொள்ளாதே என்ற பல்லவியை ஜிஹாவாவிடமிருந்து கேட்டுக் கேட்டு டேவிடுக்கு அலுத்துவிட்டது. டேவிடின் வாழ்க்கை நிரந்தரமாக இன்பமயமாவதற்கு அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தை வந்தால் போதும். ஆனால் அந்த வார்த்தை ஒரு தடவையாவது வரவில்லை.

என்ன பைத்தியக்கார எண்ணம்! ஜிஹாவாவைப் போன்ற ஓர் அழகி டேவிடைப் போன்ற முடவனைக் காதலிப்பது வெறும் மனப் பிரமை அல்லவா? அப்படியே அவள் காதலித்தாலும், பார்க்கும்போதே அருவருப்பை உண்டாக்கும் முடவனிடம் அவள் என்ன இன்பத்தை அடைய முடியும்? அத



குற்றவாளி:—ஒரு வாரம் வழக்கை ஒத்திப் போடுங்க. வக்கீல் ஐயாவுக்கு உடம்பு குணமில்லே.

மாஜிஸ்ட்ரேட்:—உன்னைத்தான் கையும் களவுமாக இரண்டு போலீஸ்காரர்கள் பிடித்தார்களே! உன் வக்கீல் வந்து என்னத்தைச் சொல்லப்போகிறார் என்று எனக்குத் தெரியவில்லை!

குற்றவாளி:—ஆமாம், ஐயா. அதைத் தெரிந்து கொள்ளத்தான் எனக்கும் ஆவலாக இருக்கிறது.

னால் அவளது வாழ்க்கையும் அல்லவா பாழாகி விடும்!

இந்த உண்மையை எல்லாம் எண்ணிப் பார்த்தபோது டேவிடின் கண் முன்னே உலகம் சுழன்றது. அவனைப் பயங்கரமான அந்தகாரம் கவிந்து கொண்டது. அவன் உடல் எரியத் தொடங்கியது.

* * *

டேவிட் தோட்டத்தில் தனியாக வெகு நேரம் உட்கார்ந்து கொண்டிருந்தான். பிறகு அயர்ந்து அங்கேயே படுத்துக் கொண்டான்.

கனவு உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த அவனுக்கு எல்லாம் பொய்யாகத் தோன்றியது.

ஜிஹாவா ஆஸ்பத்திரியில் வேலை செய்யவில்லை. கூக்குரலிடும் சிப்பாய்களிடம் சென்று அவள் ஆறுதல் கூறவில்லை. ஜிஹாவாவைப் போன்ற அழகிக்கு ஆஸ்பத்திரியில் என்ன வேலை?

இது என்ன ஆச்சரியம்? டேவிட் தன்னை முடவன் என்று நினைத்துக் கொண்டிருந்தது தவறு. அவன் இரண்டு கால்களும் சரியாக இருக்கின்றனவே!

அதோ ஜிஹாவா வருகிறாள். அவள் கூந்தலில் எவ்வளவு பிரகாசம்! வானத்தில் உள்ள நட்சத்திரங்கள் அவள் கூந்தலில் விழுந்து விட்டன போலும்! அவன் அவளது கூந்தலைத் தடவிக் கொடுக்கிறான். இருவரும் தழுவிக் கொள்கின்றனர். டேவிட் எந்த இன்பத்துக்காக இவ்வளவு நாள் ஏங்கினானோ, அது பூர்த்தியாகிவிட்டது! ஜிஹாவா டேவிடுக்குச் சொந்தமாகி விட்டாள்!

ஆனால், அவன் உடல் இன்னும் ஏன் இப்படிக் கொதிக்கிறது? இன்னும் சிறிது நேரம் சென்றால் அது குளிர்ந்து விடும்!

மறுநாள் அந்த இடத்தில் எதுவும் இராது. ஆஸ்பத்திரி இராது. காயங்களுக்குக் கட்டும் துணிகளும் மருந்தும் இராது. சிப்பாய்கள் இருக்க மாட்டார்கள். டேவிடும் ஜிஹாவாவும் மாத்திரம்தான் இருப்பார்கள்.

டேவிட் கண்களை விழித்துக் கொண்டான். ஜிஹாவா எங்கே? திடீரென்று மறைந்து எங்கேயோ போய் விட்டாளே!

டேவிட் எழுந்திருந்து ஊன்றுகோல் கட்டைகளின் உதவியால் வெளியே சென்றான். எவ்வளவு அமைதி! அப்போது ஜாபா தெருக்களில் மனித சந்தடியே இல்லை.

மத்திய தரைக் கடலின் அலை ஓசைகள் அவன் செவிகளில் விழுந்தன. சில மணி நேரத்துக்கு முன் அவன் கேட்ட சங்கீதக் கச்சேரிக்கும் மேற்படி அலைகளின் இசைக்கும் யாதொரு வேற்றுமையும் இருப்பதாக அவனுக்குத் தெரியவில்லை.

சங்கீதம் அவன் மனத்தைக் கொள்ளை கொண்டது போல், அலைகளும் அவன் மனத்தைக் கொள்ளை கொண்டன.

டேவிட் சென்று கொண்டே இருந்தான். அலைகளை நோக்கி, கடலின் இன்னிசையைக் கேட்டுக் கொண்டே சென்றான்.

எரிந்து கொண்டிருந்த டேவிடின் உடல் குளிர்ந்தது. முதலில் டேவிடுக்கு உலகம் முழுதும் சூன்யமாக இருப்பது போல் தோன்றியது. பிறகு ஒன்றும் கண்களுக்குத் தெரியாமல் எங்கும் இருள் சூழ்ந்து கொண்டது.

கடலின் கருணையால் டேவிடின் சரீர வேதனையும் மன வேதனையும் தீர்ந்தது!

* * *

மறு நாள் சூரியன் ஆனந்தமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தான். எப்பொழுதும் போல் ஜாபா துறைமுகத்தில் அலைகள் மோதிக் கொண்டிருந்தன.

ஜிஹாவா தோட்டத்தில் வருத்தத்துடன் உட்கார்ந்து கொண்டிருந்தாள். டேவிட் எங்கு போய் விட்டானோ?

தோட்டக்காரன் புஷ்பச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தான். பலவித வர்ணப் புஷ்பங்கள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன.

தண்ணீர் ஊற்றி முடிந்ததும், தோட்டக்காரன் ஜிஹாவா உட்கார்ந்து கொண்டிருக்கும் இடத்துக்கு வந்தான்.

"கேட்டீர்களா? இன்று விடியற்காலம் கடற்கரையில் ஒதுங்கிக் கிடந்த ஒரு சவத்தை இராணுவ லாரி ஏற்றி வந்தது. இறந்து கிடந்த அந்த நொண்டிச் சிப்பாயின் பெயர் டேவிட்டாம்" என்றான்.

ஜிஹாவா யாதொரு பதிலும் சொல்லவில்லை. அப்படியே பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தாள்.

சாமுவலின் கூக்குரல் அவளைத் தட்டி எழுப்பியது. யந்திரத்தைப் போல் உணர்ச்சியற்றவளாய் எழுந்து சென்றாள்.




# கண்டியூர் கந்தசாமி

**அக்ஷயம்**

அந்தப் பிராந்தியத்தில் யாருக்குமே கண்டியூர் கந்தசாமியின் பெயரைக் கேட்டால் குலை நடுக்கம்தான். கொள்ளை களவு முதலிய செயல்களில் அவன் மகா நிபுணன். பதுங்கிப் பாயும் பூனையைப் போல் ஆட்களை மடக்கி வழிப்பறி செய்வதில் அவனுக்கு இணை அவன்தான். அவன் கையில் அகப்பட்டவர்கள் அப்புறம் உருப்பட்டதில்லை. சிற்சில சமயங்களில் அவன் பணத்தைப் பறிப்பதோடு மட்டும் அல்ல, வம்சப் பூண்டே இல்லாமல் வேரோடு கூடப் பறித்து எறிந்து விடுவான். கொலை, கொள்ளை என்று அவன் இறங்கி விட்டால் குழந்தை குஞ்சு என்று கருணை பார்க்க மாட்டான்; எல்லோரையுமே தீர்த்துக் கட்டி விடுவான்.

கந்தசாமிக்குக் கொஞ்ச காலமாகப் பருத்தியூர் பொன்னுசாமியின்மீது ஒரு கண் இருந்து வந்தது. பொன்னுசாமியைப் போன்ற பெரியதனக்காரர் பதினைந்து மைல் சுற்றளவுக்கு யாருமே கிடையாது. அவருடைய செல்வாக்கு அதற்கு அப்பாலும் கூடப் பரவியிருந்தது. அவரை எப்படியாவது சூறையாடி விட வேண்டும் என்று ஒரு திட்டம் போட்டான் கந்தசாமி. எந்தக் காரியத்திலும் அவன் நினைப்பது, அது நடக்காமற் போயிற்று என்று இதுவரை இருந்ததில்லை. அதாவது இதுவரை அவன் ஆசை நிராசையாயிற்று என்ற பேச்சே எழுந்ததில்லை.

ஆயினும் பொன்னுசாமியின் விஷயத்தில் யோசியாமல் திடுதிப்பென்று இறங்கி விட்டால் அது விபரீதமாக முடியக் கூடும் என்பதை அவன் நன்கு உணர்ந்திருந்தான். பொன்னுசாமியின் விஷயத்தில் அஞ்சா நெஞ்சம் படைத்த கந்தசாமிக்கே அவ்வளவு காபராவென்றால், அவருடைய வீர தீர பராக்கிரமமும் செல்வாக்கும் அளவு மீறியதாகத்தானே இருக்க வேண்டும்?

பொன்னுசாமியின் வீடு பாறாங்கல் கோட்டையாக அமைந்திருந்தது. அவரிடம் வேலை பார்த்து வந்த வேலைக்காரர்களும் மிகவும் எஜமான விசுவாச முள்ளவர்கள். காரணம், பொன்னுசாமியின் தாராள மனப்பான்மையும் நல்ல ஹிருதயமும்தான் என்று சொன்னால் சிறிதும் மிகையாகாது.

சிற்சிலருக்குச் சிற்சில விஷயங்களில் அதிக ஆர்வம் உண்டாவது இயல்பே அல்லவா? ஒருவர் நூல்கள் சேர்ப்பதில் பற்றுள்ளவராயிருந்தால், இன்னொருவர் நாணயங்கள் சேர்ப்பதில் பித்தர்களாக இருப்பதைக் காண்கிறோம் அல்லவா? அதே போலப் பொன்னுசாமிக்கு ஆயுதங்கள் சேர்ப்பதில் அதிக ஆர்வம் உண்டு. ஆனால் அவருடைய ஆர்வத்துக்கும் பிறருடைய ஆர்வத்துக்கும் உள்ள ஒரு சிறிய வித்தியாசம் என்னவென்றால், பிறர் சில பொருள்களைச் சேர்த்து வைப்பதோடு, திருப்தி அடைந்து விடுவார்கள். ஆனால் அவரோ அவற்றைப் பிரயோகிக்கும் முறையையும் கற்றுத் தேர்ந்து விடுவார். ஆகவே, அவருக்குச் சிலம்பம், வாள் வீச்சு, வேல்வீச்சு முதலிய ஆயுதப் பயிற்சிகள் நன்கு வரும். எனவே, யாரும் அவரிடம் தன் பலத்தைப் பிரயோகித்து நேரடித் தாக்குதலை உபயோகித்து வெற்றி காண்பது என்பது கனவிலும் நினைக்க இயலாத காரியமாக இருந்தது. கந்தசாமியும் தன் நேரடிக் கொள்ளை அவரிடம் சாயாது என்பதை நன்கு உணர்ந்திருந்தான்.

பொன்னுசாமியின் வீட்டுக்குள் நுழைவதற்கு வெகு சுலபமான ஒரு குறுக்கு வழி இருந்தது. அந்தக் குறுக்கு வழியில் யார் வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் போகலாம். அவ்வழியே வருபவருக்குக் கதவடைப்பு என்பதே அவருடைய அகராதியில் கிடையாது. ஆகவே, அச்சம் தரும் அந்தப் பாதையை விட்டு, ராஜ பாட்டையாகச் செல்லக் கூடிய வழியில், தானும் சென்றால் என்ன என்று யோசித்தான் கந்தசாமி. யோசிக்க யோசிக்க அவனுக்கு அந்த வழியே சரியானதென்று பட்டது.

பொன்னுசாமிக்குச் சாதுக்கள், சந்நியாசிகள் என்றால் அபார பக்தி. பலத்தையும் சக்தியையும் பிரயோகித்து அவரிடமிருந்து ஒரு தம்பிடி என்றால் ஒரு தம்பிடி கூடக் கறக்க முடியாது. ஆனால் பக்தி, சிரத்தை என்ற பெயருடன் போய்விட்டால் பணம் காசு அங்கே தண்ணீர் பட்ட பாடுதான்.

அக்கம் பக்கத்துக் கிராமங்களில் எங்கேயாவது ஒரு சாமியார் வந்திருக்கிறார் என்று கேள்விப் பட்டால் போதும், உடனே பொன்னுசாமி அவரைத் தரிசித்து வரப் புறப்பட்டு விடுவார். ஆகவே, அவரைப் பற்றி அநேக வதந்திகள் கூட உலாவி வந்தன. துறவிகளின் கருணையினாலும் ஆசீர்வாதத்தினாலுந்தான் அவருக்குப் பின்னைப் பேறு கிடைத்தது என்று சொன்னார்கள் சிலர். சாதுக்களின் கருணைக் கண் பார்வை வீழ்ந்திருப்பதனால் அவருடைய வீட்டில் லக்ஷ்மி நிரந்தரமாக வாசம் செய்கிறாள் என்றனர் வேறு சிலர்.

தெளிவான விஷயம் என்னவென்றால், பொன்னுசாமியிடம் ஏதாவது காரியம் ஆகவேண்டும் என்றால் துறவி வேஷம் போட்டுக்கொண்டு சென்றால் சுலபமாகச் சாதித்துக் கொள்ளலாம் என்பதுதான்.

தன் நோக்கம் நிறைவேற வேண்டும் என்றால் எந்த மனிதனும் தன் புத்தியைக் கொண்டோ அல்லது பலத்தைக் கொண்டோ ஈடேற்றிக் கொள்ள வேண்டும் என்று நினைப்பதில்லை. சிரமமின்றிச் சுலபமாகச் சாதித்துக் கொள்ள ஏதாவது வழி யிருக்கிறதா என்றுதான் முதலில் பார்ப்பான். அப்படியிருக்கிறது என்று தெரிந்து விட்டால் அதன் மூலமே தன் நோக்கத்தை ஈடேற்றிக் கொள்ள விரும்புவான். கந்தசாமியும் மனிதன்தானே? விதிவிலக்கு அல்லவே? ஆகவே, அவனும் தன் பலப் பரீட்சையை ஒத்திப் போட்டுச் சுலபமான வழியான இரண்டாவது மார்க்கத்தை மேற்கொள்ள முயன்றதில் வியப்பில்லை அல்லவா?

கந்தசாமி உடல் முழுவதும் வெண்ணிறத் திருநீறு பூசிக்கொண்டான். காவித் துணி உடுத்தித் துறவியாக உரு மாறினான். வேஷத்துக்குத் தகுந்தபடி பெயரையும் சச்சிதானந்த யோகி என்று மாற்றி வைத்துக் கொண்டான். பிறகு தன் இரு சிஷ்யர்கள் புடை சூழப் பருத்தியூருக்குப் பக்கத்தில் மூன்று மைல் தூரத்தில் உள்ள ஆற்றுப் படுகைக்கு வந்து சேர்ந்தான். அங்கே இருந்த மடம் அவனுக்கு ஆசிரமம் ஆகியது. கந்தசாமி போட்ட வேஷம் கனகச்சிதமாக அமையவே, சச்சிதானந்த யோகியின் பெயரும் புகழும் பரவலாயிற்று.

பொன்னுசாமி ஆரில் நாளில் தன் கிராமங்களைப் பார்வையிட்டு வருவதற்காகப் போய் வருவது உண்டு. அன்று அந்த வழியாகப் போய்க்கொண்டிருந்த பொழுது மடத்தில் இரண்டொரு காவி உருவங்கள் தென்படவே, யாரோ சாமியார் வந்திருக்கிறார் என்பதை ஊகத்தினால் உணர்ந்து கொண்டார். அவர்கள் வந்திருப்பதைப் பாராமல் போய் விட்டால் அது அபசாரமாக அல்லவா முடியும்? மனத்தில் இந்த எண்ணம் எழுந்ததுதான் தாமதம், அவருடைய கால்கள் அந்த எண்ணத்தைச் செயலாக்க முனைவதில் ஈடுபட்டன.

சுவாமி சச்சிதானந்தா, மடத்தை நோக்கி ஆள் வருவதைப் பார்த்ததும், சமாதியில் ஈடுபட முயற்சி செய்வதாகப் பாவனை செய்தார். வந்ததும் வராததுமாகப் பொன்னுசாமி தரையில் சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து வணங்கினார்.

உடனே சுவாமி சச்சிதானந்தரின் வாயிலிருந்து, "நீடூழி வாழ்வாயாக!" என்ற ஆசிச் சொல் வெளி வந்தது.

பொன்னுசாமி சுவாமியின் உத்திரவு பெற்று அவருடைய காலடிகளில் அமர்ந்தார். சுவாமி சச்சிதானந்தாவுக்குத் தம்மை நாடி வந்திருப்பவர் பொன்னுசாமிதான் என்பதை அறிந்து கொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை. அவரும் அவருடைய தோழர்களும் நினைத்த காரியம் இவ்வளவு சீக்கிரம் கைகூடுவதற்கான அறிகுறிகள் தென்படுவதைக் கண்டதும் மகிழ்ச்சி யுற்றனர். ஏனெனில் இவ்வளவு சீக்கிரம் தங்கள் காரியம் கைகூடக் கூடும் என்று அவர்களில் யாரும் கனவில்கூட நினைக்க வில்லை. இரு தோழர்களும் தலைவரின் கண் ஜாடையைக் கண்டு காரியத்தில் ஈடுபடுவதற்காகத் தயாராக நின்றனர்.

"சுவாமி இந்தப் பக்கம் விஜயம் செய்தது எப்பொழுதோ?" என்று மிகவும் விநயமாகக் கேட்டார் பொன்னுசாமி.

"இன்று காலையில்தான் வந்தோம்!" என்றார் சுவாமி சச்சிதானந்தா.

"இங்கே இருப்பதில் சிரமமா யிருந்தால் சுவாமி ஏழையின் குடிசைக்கு எழுந்தருளலாமே?" என்றார் பொன்னுசாமி.

"சாது சந்நியாசிகளுக்குக் குடிசையில் இருப்பினும் கஷ்டம் உண்டாவதில்லை, குழந்தாய்!" என்று பதில் வந்தது சுவாமி சச்சிதானந்த யோகியின் வாயிலிருந்து.

கந்தசாமி தன் ஆசிரமத்தை அங்கே நிறுவிக் கொண்டதற்கு முக்கியமான காரணம் தன் தோழர்களுடன் கலந்து ஆலோசித்துச் செயலில் இறங்கச் சௌகரியமா யிருக்க வேண்டும் என்பதுதான்.

"சுவாமி வெகு தொலைவிலிருந்து வந்திருக்கிறாற்போலிருக்கிறது, ரொம்பவும் களைப்பாகக் காணப்படுவதிலிருந்து. ஆகையினால்





வாத்தியார் :—மணி! நான் இப்பொழுது கேட்ட கணக்குக்கு விடை என்னடா?
மணி :—என்னைக் கேட்கிறீர்கள். என் பக்கத்துப் பையனைக் கேளுங்கள். அவனுக்குத் தெரிந்தால், எனக்குந் தெரிந்த மாதிரி!

கால்களைப் பிடித்துச் சிச்ருஷை செய்யும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைக்க வேண்டும்!" என்று சொல்லி, அவருடைய பதிலைக் கூட எதிர்பாராமல், பொன்னுசாமி சுவாமியின் கால்களைப் பிடிக்கத் தொடங்கினார்.

பொன்னுசாமி திடுதிப்பென்று கால்களைப் பிடிக்கத் தொடங்கவே, கந்தசாமி திடுக்கிட்டான். ஆயினும் உடனே தன்னைச் சுதாரித்துக் கொண்டு, வெட்டுப் பட்டிருந்த கால் விரலைச் சட்டென்று தன் காவித் துணியினால் மூடி மறைத்துக் கொண்டான். பிறகு பொன்னுசாமியை ஏற இறங்கப் பார்த்தான். பொன்னுசாமியின் இடையில் உடைவாள் இருப்பதைக் கண்டு, "உனக்கு ஆயுதங்கள் என்றால் அதிகப் பிரியமோ?" என்று கேட்டு வைத்தான்.

"ஆமாம். என் வாழ்க்கைக்கு ஆதாரமே இதுதான்!" என்றார் பொன்னுசாமி.

"நீ சொல்வது விசித்திரமாயிருக்கிறதே! ஒரு பக்கம் ஆயுதம் வைத்திருக்கிறாய். இன்னொரு பக்கம் சாது சந்நியாசிகளுக்குப் பணிவிடை செய்கிறாய். உன் காரியம் உழவுக்கும் அக்னிஹோத்திரத்துக்கும் என்பார்களே, அதுபோல் அல்லவா இருக்கிறது!" என்று சிரித்தவாறே கேட்டார் சச்சிதானந்தா.

"எத்தனையோ பேர் என்னிடம் இதே கேள்வியைக் கேட்டிருக்கிறார்கள். எல்லோருக்கும் இதில் ஏதோ விசித்திரம் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் எனக்கு இதில் எவ்விதமான விசித்திரமும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஏனெனில் உடைவாளை உடலை ரட்சித்துக் கொள்வதற்காக வைத்திருக்கிறேன். ஆத்மாவை ரட்சித்துக் கொள்ளும் பொருட்டுச் சாதுக்களின் பணிவிடையை மேற்கொண்டிருக்கிறேன். இகலோக வாழ்க்கை நடத்தும் என்னைப் போன்றோர் இரண்டையும் பற்றிக் கவலைப்பட வேண்டியிருக்கிறதே, சுவாமி! என்ன செய்வது?" என்றார் பொன்னுசாமி.

"இவ்வூர்ப் பெரியதனக்காரர் நீதானே?" என்று கேட்டார் சுவாமி சச்சிதானந்தா.

அதைக் கேட்டதும் பொன்னுசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. "நான்தான் இந்தப் பக்கத்துப் பெரிய தனக்காரர் என்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டார்.

"ஒவ்வொரு விஷயமும் பிறர் சொல்லித்தான் தெரியவேண்டும் என்பதில்லை" என்று கனைத்துக் காகப் பதில் அளித்தார் சுவாமி சச்சிதானந்தா.

அதைக் கேட்ட பொன்னுசாமிக்கு அந்தச் சாமியாரின் மீது பக்தி சிரத்தை இன்னும் அதிகரித்தது.

"நீ ஒருவருடைய உதவியும் இன்றி இப்படித் தனியாகச் சுற்றுகிறாயே, யாராவது உன்னை அடித்து விட்டால்..?" என்று கேட்டார் சச்சிதானந்தா.

உடனே அவரது இரு சிஷ்யர்களும் ஒருவரையொருவர் கண் ஜாடையினால் பார்த்துக் கொண்டனர். போட்டிருந்த திட்டத்தை நிறைவேற்ற உத்தரவு கிடைத்து விட்டதாகவே அவர்கள் இருவருக்கும் தோன்றியது. ஆனால் சாது சந்நியாசிகளின் பால் பக்தி பூண்ட பொன்னுசாமியின் இருதயத்துக்கு அந்த வார்த்தையில் தொனித்த ரகசியத்தின் விவரம் விளங்கவில்லை. அந்தக் கேள்வியைக் கந்தசாமி கேட்டதற்கு முக்கியமான காரணம் என்ன, தெரியுமா? பொன்னுசாமியுடன் வேறு யாராவது துணைக்கோ உதவிக்கோ வந்திருக்கிறார்களா, அல்லது அவர் மட்டும் தனியாக வந்திருக்கிறாரா என்பதைத் துப்புத் துலக்கித் தெரிந்து கொள்வதற்காகத்தான்.

பொன்னுசாமி மிகவும் அடக்கமான குரலில், "எனக்கு உதவி செய்ய இதோ என் இரு புஜங்கள் இருக்கின்றன. எவனுக்கு அவனுடைய இரு புஜங்களும் உதவி செய்யவில்லையோ, அவனுக்குப் பிறர் என்ன பிரமாதமான உதவி செய்துவிட முடியும்? தன் கையே தனக்கு உதவி என்னும் முதுமொழி தங்களுக்குத் தெரியாததல்லவே!" என்றார்.

"அது சரி! நானே உன்னை அடித்து விடுகிறேன் என்று வைத்துக் கொள்......"

"பழம் நழுவிப் பாலில் விழுந்து அதுவும் வாயில் விழுந்த கதைதான். எந்த முக்திக்காக வேண்டித் தாங்கள் இவ்வளவு மாபெரும் சாதனையில் ஈடுபட்டிருக்கிறீர்களோ, அது எனக்கு வெகு இலகுவில் கிடைத்து விடும். நான் படும் இந்த உலகத்துத் தொல்லைகளும் தொந்தரவுகளும் உங்கள் கழுத்தைக் கட்டிக் கொண்டு விடும்!" என்று சட்டென்று பதில்சொன்னார் பொன்னுசாமி.

ஆகா! சிக்கல் சிறிதும் இல்லாத எவ்வளவு அழகான பதில்! சச்சிதானந்தாவால் அதற்கு

மேல் என்ன சொல்வது என்று புரியவில்லை. பொன்னுசாமி சொன்ன அந்தச் சொற்கள் அவருடைய உள்ளத்தில் வேலை செய்யத் தொடங்கி விட்டன.

உலகபந்தனத்தில் கட்டுண்டிருந்தும் பொன்னுசாமி எவ்வளவு உண்மைத் துறவியாக இருக்கிறான்? சாது வேஷத்தில் இருந்தும் நாம் எவ்வளவு நீசனிலும் நீசனாக இருக்கிறோம்! இதை எண்ணிய சச்சிதானந்தாவின் மனத்தை என்னவோ செய்தது.

அதற்குப் பிறகு சிறிது நேரம் அங்கு மௌனம் நிலவியிருந்தது. பொன்னுசாமி சுவாமி சச்சிதானந்தாவின் கால்களைப் பிடித்துக் கொண்டிருந்தார்! திடீரென்று ஏதோ யோசித்த பொன்னுசாமி, "சுவாமி! ஆத்மாவுக்கும் எலும்புத் தோல் போர்த்த இந்த உடலுக்கும்தான் எத்தனை வித்தியாசம், பார்த்தீர்களா?" என்று கேட்டார்.

"என்ன சொன்னாய்?"—விஷயம் விளங்காமல் கேட்டார் சச்சிதானந்தா.

"கண்டியூர் கந்தசாமி என்னும் கொள்ளைக்காரன் இருக்கிறானே, அவனைப் பார்த்தால் உங்களைப் பார்க்க வேண்டாமாம். உருவத்தில் உங்கள் இருவருக்கும் அவ்வளவு ஒற்றுமை இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்!" என்றார் பொன்னுசாமி.

"என்ன? என்ன?"—துடித்த மனத்தை அடக்கிக்கொண்டு கேட்டார் சச்சிதானந்தா. பொன்னுசாமி தன் உண்மை உருவத்தைப் புரிந்து கொண்டு விட்டாரோ என்ற பயம் சுவாமிகளுக்கு.

"கந்தசாமியின் வலது காலில் எப்பொழுதோ யாரோ கத்தியால் வெட்டியதில் ஒரு விரல் துண்டிக்கப் பட்டதாகக் கேள்விப் பட்டேன்:..." என்று கூறியவாறே பொன்னுசாமி சச்சிதானந்தாவின் காலைப் பார்த்தார்.

சச்சிதானந்தாவுக்கு இருதயம் 'படபட' வென்று அடித்துக் கொண்டது.

"ஆமாம். இவ்வளவு சொல்லுகிறாயே, என்னை யாரென்று தெரியுமா?" என்று படபடப்பை அடக்கிக் கொண்டு கேட்டார் சச்சிதானந்தா.

"நன்றாயிருக்கிறது! தங்களைத் தெரியாமலா? தங்களுடைய தேஜோ மயமான உருவத்தைப் பார்த்தவுடனேயே தாங்கள் தாம் சச்சிதானந்தயோகி என்பது சொல்லாமலே விளங்கி விடுமே, சுவாமி!" என்றார் பொன்னுசாமி. பிறகு தான் நிறுத்திய இடத்திலிருந்து மறுபடியும் பேச்சைத் தொடர்ந்தார். "மார்பில் தங்களைப் போலவே அவனுக்கும் ஒரு மச்சம் இருக்கிறதாம். வலது கையில் கட்டை விரலுக்கு அருகே ஒரு சின்னக் கட்டை விரலும் இருக்கிறதாம், ஐந்துக்குப் பதில் ஆறுவதாக. எதற்குச் சொல்கிறேன் என்றால் அசப்பில் பார்த்தால் அவன் தங்களைப் போலவே இருப்பானாம். இதெல்லாம் போலீஸ் வெளியிடும் தகவல். அவனைப் பிடிப்பதற்கு அவர்கள் இல்லாத முயற்சிகள் எல்லாம் எடுத்துக் கொண்டிருக்கிறார்களாம். தங்களைக் கூடச் சந்தேகித்துத் தங்கள் நடவடிக்கையையெல்லாம் கவனிப்பதற்காகத் துப்பறியும் போலீஸைச் சர்க்கார் நியமித்தாலும் நாம் ஆச்சரியப் படுவதற்கில்லை......"

அவர் வாக்கியத்தை முடிப்பதற்குள்ளேயே சச்சிதானந்தாவுக்குத் தம் வேஷம் வெளுத்து விட்டதோ என்று தோன்றியது. சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விடலாமா என்று கூட எண்ணினார். அதற்குள் பொன்னுசாமி மேலும் தொடர்ந்தான். "ஆனால் கடவுள் சிருஷ்டியில் உள்ள ஒரு விசித்திரத்தைப் பாருங்கள்! உடல் ஒரே விதமாக இருந்தாலும் ஆத்மாவுக்கும் ஆத்மாவுக்கும் இடையே எவ்வளவு பெரும் வித்தியாசத்தை ஏற்படுத்தி யிருக்கிறார்! தாங்களோ அபயம் என்று வந்தவர்களுக்கு அபயம் அளித்து இகலோக வாழ்வின் இக்கட்டுகளை நீக்கும் கருணை மூர்த்தியாக விளங்குகிறீர்கள்! கந்தசாமியோ கருணையின்றிக் குழந்தைகளைக் கூடக் கொன்று போடும் கொடும் பாவியாக விளங்குகிறான்" என்றார்.

அதைக் கேட்ட பின்தான் கந்தசாமிக்குப் போன உயிர் திரும்பி வந்தது. அப்புறம் தன் கடைக் கண்ணினால் பொன்னுசாமியின் முக பாவத்தைப் புரிந்து கொள்ள முயன்றான். அவர் உள்ளத்தில் தன்னைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் உதிக்கவில்லை என்று தோன்றிற்று. 'ஆகா! பண்பட்ட இருதயம் படைத்த இவருக்குச் சாதுக்களிடம் உள்ள ஈடுபாட்டை என்னவென்பது?' என்று தன் மனத்துள்ளேயே வியந்து கொண்டான்.

பக்தி யற்ற இருதயத்தில் தான் சந்தேகம் எழும். ஆழ்ந்த பக்தி பூண்டவனின் உள்ளத்தில் பக்தியைத் தவிர வேறு எண்ணம் எழுவதற்கே இடம் இல்லை.

முகஸ்துதி இருதயத்திலே ஒரு சுமையை உண்டாக்கிக் கஷ்டத்துக் குள்ளாக்குகிறது. ஆனால் உண்மையான பக்தி உள்ளத்தையே ஆட்டி வைக்கிறது. அவநம்பிக்கையுடன் ஒருவரைப் புகழ்ந்து கூறும் சொற்களுக்கு முகஸ்துதி என்று பெயர். உறுதியான நம்பிக்கையுடன் புகழ்ந்து கூறும் சொற்கள் பக்தி என்னும் புனிதப் பெயர் பெறுகின்றன.

உபாஸிப்பவன் ஜட மயமான கற்சிலைக்கே தன் உபாஸனையின் பிரபாவத்தைக் கொண்டு திவ்ய சக்தியை உண்டாக்கி விடும்பொழுது கந்தசாமியின் சேதன மயமான மனத்திலே மாறுதலை உண்டாக்குவது அவ்வளவு கடினமான காரியம் அல்லவே!

கந்தசாமிக்கு நினைவு தெரிந்த நாள்முதல் அவனை எல்லோரும் கல் நெஞ்சக்காரன் என்றுதான் சொல்லி வந்திருக்கிறார்கள். இன்றுதான் முதல் தடவையாக அவன் தன் வாழ்க்கையிலேயே ஒருவன் தன்னை நல்ல நெஞ்சு படைத்தவன் என்று சொல்லக்

கேள்விப்பட்டான். எத்தனையோ பேரை அவன் தன் வாளுக்கு இரையாக்கி மீளாத் தூக்கத்தில் ஆழ்த்தி யிருக்கிறான். அவர்களுடைய உள்ளத்தில் எல்லாம் அவனிடம் அடக்க மாட்டாத ஆத்திரமும், வெறுப்பும், பழி வாங்கும் நோக்கமும்தான் தலை யெடுத்து ஆடி யிருக்கின்றன. அதையெல்லாம் கண்டு அவன் இன்னும் அதிகமாக ஆத்திரமுற்றுப் போர் புரிந்திருக்கிறான். ஆனால் இன்று வந்தவனோ தன் பக்தியையும் சிரத்தையையும் அவனிடம் அள்ளிச் சொரிந்திருக்கிறான். பக்தியினால் பொன்னுசாமியின் கண்கள் எழும்பவில்லை யென்றால், அவனுடைய பக்தியின் பெருமையைக் கண்ட திகைப்பினால் கந்தசாமியின் கண்கள் எழும்பவில்லை. நாக்கில் நரம்பின்றி தன்னைப் பற்றித் திட்டியவர்களின் சுடு சொற்களைத்தான் இன்று வரை அவன் கேட்டிருக்கிறான். ஆனால் இன்றோ பக்தி பரவசமான பொன்னுசாமியின் இதந்தரும் சொற்களைக் கேட்டான்.

அதன் பலனாக அவன் உள்ளத்தில் பலத்த புயல் வீசத் தொடங்கிற்று. பொன்னுசாமி பகல் முழுவதும் சச்சிதானந்தாவின் பணிவிடையில் ஈடுபட் டிருந்தார். பொழுது சாய்ந்து இருட்டி விடவே, மறுநாள் வருவதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டார்.

அவர் விடை பெற்றுக் கொண்டு இருபது முப்பது கஜ தூரம்கூடப் போயிருக்க மாட்டார். கந்தசாமிக்குத் திடீரென்று ஒரு அலறல் சத்தம் கேட்டது.

கந்தசாமியின் இரு தோழர்களும் கைக்குக் கிட்டிய சந்தர்ப்பத்தை நழுவ விடும் அறிவிலிகள் அல்ல. எனவே, பொன்னுசாமியைப் பின்னாலிருந்து தாக்கி விட்டனர். அலறல் சத்தம் கேட்டதும் கந்தசாமி கதிகலங்கிப் போய் ஒரே ஓட்டமாக ஓடினான். அதற்குள் அடிபட்ட பொன்னுசாமி பூமியில் விழுந்து விட்டார்.

அந்தக் காட்சியைக் கண்ட கந்தசாமி கதிகலங்கிப் போய்ச் செய்வதறியாது நின்றான். அவன் உள்ளத்திலே பெருத்த மல்போர் நிகழ்ந்து கொண்டிருந்தது.

பொன்னுசாமியின் கண்கள் ஒருமுறை நிமிர்ந்து அவனை நோக்கின. அடுத்த கணம் உதடுகள் அசைந்தன. அவர் கந்தசாமியை அருகில் அழைத்து, "சுவாமி! தாங்கள் அருகில் வந்து என் தலையில் தங்கள் கைகளால் தடவிக் கொடுத்து ஆசீர்வதியுங்கள். கடைசி காலத்தில் என் அருகில் ஒரு மகாத்மா இருந்து இம்மாதிரித் தடவி ஆசீர்வதித்து அனுப்ப வேண்டும் என்பதுதான் என் ஆசையாக இருந்தது. நல்லவேளையாகத் தாங்கள் என் அருகில் இருக்கிறீர்கள். இது என் பாக்கியம்தான்!" என்றார்.

ஏமாற்றுவதற்காகப் போட்டுக் கொண்ட சாது வேஷம் கந்தசாமியின் உள்ளத்தை வேதனையினால் வாட்டிப் பிழிந்தது. ஆண்மை அவனை அறை கூவி 'இப்படியா நம்பி வந்தவனை மோசம் செய்வாய்?' என்று கேட்டது. அடுத்த நிமிஷம் போலிச் சாது வேஷம் நீங்கி உண்மைச் சாதுவின் உருவம் அவனது உள்ளத்திலே தலை எடுத்தது.

கந்தசாமி குனிந்தான். உள்ளம் துடித்தது. உடல் துடித்தது. உடனே பொன்னுசாமியின் முதுகில் ஏற்பட்டிருந்த காயத்தைத் தன் ஒரு கையால் அழுத்திப் பிடித்துக் கொண்டான். இன்னொரு கையால் தன் காவித் துணியை எடுத்து ரத்தம் வெளியே வராமல் இருக்குமாறு அழுத்திக் கட்டினான். 'பிழைத்து விடக் கூடாதா?' என்ற ஆசையுடன் பொன்னுசாமியின் துவண்டுபோன உடலைத் தூக்கிக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினான்.

மனிதனைத் தீச் செயல்கள் எவ்வளவுக் கெவ்வளவு பயங்கொள்ளி யாக்குகின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு நற் செயல்கள் துணிவுள்ளவனாக்கி விடுகின்றன.

கந்தசாமி ஆஸ்பத்திரிக்குச் சென்று தன் ரத்தத்தைக் கொடுத்துப் பொன்னுசாமியைக் காப்பாற்றினான். பொன்னுசாமி பிழைத்து விடுவார் என்ற நம்பிக்கை ஏற்பட்ட பின் தான் அவன் இருதயத்திலிருந்து நிம்மதியான நீண்ட மூச்சு வந்தது.

அவன் வெளியே வந்தபொழுது ஆயுதந் தாங்கிய போலீஸ் சிப்பாய்கள் நின்று கொண்டிருந்தனர். பொன்னுசாமி சொன்னது போலவே, போலீஸார் புலன் விசாரிக்க வென்று நியமிக்கப் பட்டிருந்த இன்ஸ்பெக்டரும் போலீஸ் உடையில் நின்று கொண்டிருந்தார். அவர் இதுவரை அவனுடைய சந்நியாசி வேஷத்தையும் சந்நியாசிகளுக்கு உகந்த செயல்களையும்தான் பார்த்திருந்தார். அந்தச் சாமியார் கந்தசாமியாக இருக்க முடியுமா என்ற சந்தேகம் அவரை விட்டு அப்பொழுதும் நீங்கினபாடில்லை.

பழைய கந்தசாமியாக இருந்தால், அந்தச் சிவப்புத் தலைப்பாக்களைக் கண்டதும் கண்களில் மண்ணைத் தூவி எப்படியாவது 'டிமிக்கி' கொடுத்திருப்பான். மனம் மாறி விட்ட அவன் போலீஸ்காரர்களைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை.

ஏனெனில் கண்டியூர் கந்தசாமி இறந்து, அவன் ஸ்தானத்தில் சாமியார் கந்தசாமி பிறந்து விட்டார். அவன் முகத்தில் காணப் பட வேண்டிய பயங்கரமும் கோரமும் ஓடி ஒளிந்து சந்நியாசியின் சாந்த ஸ்வரூபம் தாண்டவமாடியது.

அதைக் கண்ணுற்ற போலீஸ் தலைவர் கண் ஜாடையினாலேயே தம் சிப்பாய்களை நகர்ந்து வழி விடுமாறு உத்தரவிட்டார். அவர்கள் விலகி நின்று வழி விட்டனர். கந்தசாமி கம்பீரமாக எவ்விதக் கலக்கமுமின்றி ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறினான்.

அப்புறம் கந்தசாமியின் மனமோ வேஷமோ மாறவில்லை என்று இன்றும் ஜனங்கள் பேசிக் கொள்கிறார்கள்.

# விசைச் சக்தியின் வேகம்



நீங்களும் பெறுக



# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்




சிரமமான வேலை நிலையிலும், களைக்காமல் உணர்ச்சியிருக்கும் போதுதான் நீங்கள் திடமான ஆரோக்கியம் உள்ளவரென்பதைக் குறிக்கும். களைக்காத உணர்ச்சி பெறுவதற்கு, பிரதி தினமும் போஜனத்தின் அங்கமாக வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதைத்தவிர சிறந்த தொன்றுமில்லை. தேக வலுவூட்டுவதற்கு அத்யாவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட், வேலை செய்வதற்கான திராணியை பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் இதர நிலைமைகளுக்கு இடம் கொடாதபடி தேகத்திற்கு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கச் செய்யும்.

உங்கள் குடும்பம் முழுவதற்கும் இப்பொழுதே வாங்கி விடுங்கள்

# WATERBURY'S COMPOUND

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தென்புடன் வைத்திருக்கும்

NAS 739

# நீல நதி பாயும் சூடான்

## ஜெயமணி

சாட்சிக்காரன் காலில் விழுவதைக் காட்டிலும் சண்டைக்காரன் காலில் விழுவது மேல் என்று கூறுவது உண்டு. எகிப்து தேசத்தின் இன்றையத் தலைவரான ஜெனரல் முகமது நாஜீப், சூடான் பிரச்னை சம்பந்தமாக அவ் வழியையே பின்பற்ற முற்பட்டிருக்கிறார் என்று தோன்றுகிறது.

என்னளவும் தாட்சண்யமின்றி பரூக் மன்னரை ராஜ்யத்திலிருந்து விரட்ட நாஜீப் தயங்கவில்லை. எகிப்து பார்லிமெண்டையும் தேசத்தையும் தங்கள் இஷ்டப்படி ஆட்டி வைக்கும் மகத்தான செல்வாக்குள்ள வப்துக் கட்சியைக் கலைக்கவும் அவர் பின்வாங்கவில்லை. அவ்வளவு கண்டிப்பான மனிதர் இப்போது சூடான் விஷயத்தில் மிகவும் நளினமாகவும் சமாதானமாகவும் நடந்து கொள்ள முற்பட்டிருக்கிறார்.

எகிப்தை அடுத்து தெற்கேயுள்ள சூடான் நாட்டின் நட்பைப் பெறுவதற்கு எகிப்தியர்கள் இதுவரையில் பிரிட்டிஷாரின் தயவை எதிர் பார்க்க வேண்டியிருந்தது. எகிப்துக்கும் சூடானுக்கும் நெருங்கிய உறவு ஏற்பட முடியாமல் இதுவரையில் பிரிட்டிஷார் சூழ்ச்சி செய்து வந்தனர். ஆனால் இப்போது ஜெனரல் நாஜீப் பிரிட்டிஷாரின் தயவை நாடாமலேயே சூடானியர்களுடன் நேரடியாக ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருப்பதாகச் செய்திகள் கூறுகின்றன.

மேற்படி செய்திகள் பிரிட்டிஷாருக்கு மிகுந்த கலக்கத்தைக் கொடுத்திருக்கின்றன. ஏனெனில் சூடானில் பிரிட்டிஷார் தங்களுக்கு உள்ள ஆதிக்கத்தை இழந்து விட்டால், பிறகு அவர்கள் எகிப்திலும் தங்கள் செல்வாக்கை இழந்துவிட நேரும். எகிப்தில் அவர்களுடைய செல்வாக்கு குறைந்துவிட்டால், பிறகு அவர்கள் சூயஸ் கால்வாயில் தங்களுக்குள்ள ஆதிக்கத்தையும் உரிமைகளையும் இழக்கும்படி நேர்ந்து விடும்.

ஆசியாவில் பிரிட்டனின் பொருளாதார சுபிட்சத்துக்கும் அரசியல் செல்வாக்கிற்கும் சூயஸ் கால்வாய் உயிர்நாடியாக இருக்கிறது. எனினும் பிரிட்டனுக்கு சூயஸ்கால்வாய் எவ்வளவு முக்கியமோ, அதைக் காட்டிலும் எகிப்துக்குச் சூடான் பிரதேசம் பன்மடங்கு அதிக முக்கியமானது.

எகிப்து மக்கள் இருப்பதா அல்லது இறப்பதா என்ற பிரச்னையே சூடான் பிரதேசத்துடன் அவர்களுக்கு இருக்கும் உறவைத்தான் பொறுத்திருக்கிறது. சூடான் வழியாக எகிப்துக்குப் பாயும் நைல் நதி எகிப்து மக்களுக்கு அவ்வளவு முக்கியமானது. ஏழாயிரம் அல்லது எண்ணாயிரம் ஆண்டுகளாக அந்த நதிதான் எகிப்து மக்களுக்கு உயிர் ஸ்தானமாக இருந்து வருகிறது. நைல் நதி இல்லாவிடில், நைல் நதி ஜலம் அணைபோட்டுத் தடுக்கப் பட்டு விட்டால் எகிப்து மக்களின் வாழ்வும் விவசாயமும் அதோகதியாக வேண்டியது தான். அதனால்தான் எகிப்து சூடானின் நட்பையும் ஐக்கியத்தையும் விரும்புகிறது.

* * *

சூயஸ் கால்வாயைப் போல் சூடானும் பிரிட்டனின் பொருளாதார சுபிட்சத்துக்கும் அரசியல் செல்வாக்கிற்கும் இன்றியமையாததாக இருக்கிறது. சூடானில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் அஸ்தமித்து விட்டால், பிறகு பிரிட்டன் ஆப்பிரிக்காவில் தனக்குள்ள சாம்ராஜ்யத்தையே இழந்து விட நேரும்.

ஆப்பிரிக்காவின் தென் கோடியில் உள்ள கேப் டவுனிலிருந்து வட கோடியில் உள்ள எகிப்தின் தலை நகரான கெய்ரோ வரையில் சுமார் ஐயாயிரம் மைல் தூரத்



துக்கு ரயில் பாதை செல்லுகிறது. அந்தப் பாதையின் நிர்வாகத்தில் பிரிட்டனுக்கும் பங்கு உண்டு. அந்தப் பாதை ஆயிரத்து நூறு மைல் தூரம் சூடான் பிரதேசத்தைப் பிளந்து கொண்டு செல்லுகிறது. சூடானில் பிரிட்டனுக்கு உள்ள ஆதிக்கம் போய்விடுமாயின், பிறகு கேப்-கெய்ரோ ரயில் பாதையில் பிரிட்டன் உரிமை கொண்டாட முடியாமல் போய் விடலாம்.



லார்டு கிச்னர்

தவிர, நைல் நதி பாயும் பிரதேசங்களில் அபரிமிதமாகப் பருத்தி உற்பத்தியாகிறது. பிரிட்டனில் உள்ள ஜவுளி மில்களுக்கு மேற்படி பருத்தி தேவையாக இருக்கிறது. எனவே, எகிப்திலும் சூடானிலும் பிரிட்டன் ஆதிக்கத்தை இழந்து விடுமாயின், பிரிட்டிஷ் மில்கள் தூங்கும்படியான நிலைமை ஏற்பட்டு விடலாம்.

* * *

சூடானில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை எதிர்த்து 1882-ம் ஆண்டில் சூடான் மக்கள் புரட்சியை ஆரம்பித்தனர். அந்தப் புரட்சியை நசுக்கி, சூடான் மக்களை ஒடுக்குவதற்காக எகிப்தில் இருந்த பிரிட்டிஷ் துருப்புகளுடன் தளபதி ஜெனரல் சார்லஸ் ஜார்ஜ் கார்டன் படையெடுத்து வந்தார். ஆனால் சூடான் மக்கள் வெகு உக்ரமாகப் போர் புரிந்ததால் 1885-ல் சூடான் தலைநகரான கார்ட்டூமில் பிரிட்டிஷார் படு தோல்வியடைந்தனர். அந்த உக்ரமான போரில் தளபதி கார்டன் உள்படச் சகல பிரிட்டிஷ் துருப்புகளும் கொல்லப்பட்டனர்.

அதிலிருந்து பல ஆண்டுகள் வரையில் சூடானுக்குள் வெள்ளையர்கள் பிரவேசிக்கவே கூடாது என்று சூடானியர்கள் தடுத்திருந்தார்கள். பிறகு 1896ல் லார்டு கிச்னரின் தலைமையில் மீண்டும் பிரிட்டிஷ் துருப்புகள் சூடான்மீது படையெடுத்தன.

1898 செப்டம்பர் மாதம் ஆம்டூர்மான் நகரில் நடந்த யுத்தத்தில் லார்டு கிச்னர் வெற்றி பெற்றார். அதிலிருந்து சூடான் மீண்டும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட நேர்ந்தது.

1899-ம் வருஷத்திலிருந்து சூடான் பிரிட்டன் – எகிப்தின் கூட்டு நிர்வாகத்தில் இருந்து வருகிறது. அதன் காரணமாகவே அந்த நாடு ஆங்கிலோ–எகிப்திய சூடான் என்று குறிப்பிடப்பட்டு வருகிறது.

* * *

சூடான் எகிப்துடன் ஐக்கியம் அடைந்து, எகிப்தின் நிர்வாகத்துக்கு உட்பட்டு இருக்க வேண்டும் என்று சென்ற பல ஆண்டுகளாக எகிப்தியர்கள் கிளர்ச்சி செய்து வந்தார்கள். ஆனால் எகிப்துக்கும் சூடானுக்கும் ஒற்றுமை ஏற்பட முடியாமல் பிரிட்டிஷார் சூழ்ச்சி செய்து வந்தனர். சூடானின் விதியை நிர்ணயிக்க சூடான் மக்களுக்குத் தான் உரிமை உண்டு; அதில் எகிப்து தலையிடுவது சரியல்ல என்று தர்ம நியாயம் பேசி வந்தனர்.

ஆனால் ஜெனரல் நாஜிப் எகிப்துப் பிரதம மந்திரி பதவியை ஏற்ற பின் பிரிட்டிஷாரின் மேற்படி தந்திரத்துக்கு இடம் இராமல் செய்ய முனைந்துள்ளார். சூடான் விஷயத்தில் ஆதிக்கம் செலுத்த எகிப்து விரும்பவில்லை; சூடானியர்களுக்குத் தங்கள் அரசியல் விதியைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்ள உரிமை உண்டு என்று பிரகடனம் செய்துள்ளார். மேற்படி பிரகடனம் சூடான் மக்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் கொடுத்திருக்கிறது.

ஜெனரல் நாஜிப் சூடான் தலைவரான சர் அப்துல் ரஹ்மானைக் கெய்ரோவுக்கு அழைத்துப் பேசியதன் பலனாக எகிப்துக்கும் சூடானுக்கும் அபிப்பிராய பேதம் தீர்ந்து ஒற்றுமை ஏற்படுவதற்கு வழி உண்டாகியிருக்கிறது.

சர் அப்துல் ரஹ்மான், 1885-ம் ஆண்டிலே கார்ட்டூம் நகரில் பிரிட்டிஷ் துருப்புகளைத் தோற்கடித்த பிரபல சுதேசித் தலைவரான முகமது அகமதின் புதல்வர்தான்.

சூடான் தேசம் எகிப்தைக் காட்டிலும் மூன்று மடங்கு பெரியது. சுமார் பத்து லட்சம் சதுர மைல் விஸ்தீர்ணம் உள்ள சூடானில் எழுபது லட்சம் ஜனங்கள் வசிக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் முஸ்லிம்கள் ஆவர்.

சூடான் தேசத்தின் தலைநகரான கார்ட்டூமின் ஜனத்தொகை ஐம்பதினாயிரத்துக்கு மேல் இல்லை. எனினும் அந்நகர் நீல நைல் நதியும் வெள்ளை நைல் நதியும் சந்திக்கும் இடத்தில் இருப்பதால் அது அத் தேசத்தின் முக்கிய வர்த்தக ஸ்தலமாக விளங்குகிறது.



சர் அப்துல் ரஹ்மான்

1885-ம் ஆண்டில் சூடானியர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் நடந்த போரில் கார்ட்டூம் நகர் அடியோடு அழிந்தது. எனினும், பிரிட்டிஷார் வெற்றி பெற்று அந் நகரை ஆக்கிரமித்துக் கொண்ட பின், அதை நவீன முறையில் சிறந்த கட்டிடங்களுடன் நிர்மாணித்து விட்டார்கள்.

சூடான் பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரலின் நிர்வாகத்தில் தான் இருந்து வருகிறது.




ஒருநாள் மாலை. வழக்கம்போலவே அன்றும் உலாவச் சென்றேன். நான் செல்லும் வழியில் அடர்ந்து படர்ந்த கொடிகள் சூழ்ந்த மலர் குலுங்கும் வேலிக்கு நடுவே ஒரு பழங்காலத்துக் கட்டடம் இருந்தது. ஒவ்வொரு நாளும் நான் அந்தக் கட்டடத்தைப் பார்த்துக் கொண்டே செல்வேன். என் மனத்தில் அந்தக் கட்டடம் ஒரு இடத்தைப் பெற்றிருந்தது. இன்று என்னவோ அந்தக் கட்டடத்தைப் பார்த்ததும் எனக்கு அதற்குள் செல்லவேண்டும் போல் தோன்றியது. ஒருகணம் அந்தக் கட்டடத்துக்கு எதிரில் நின்றேன். மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். அந்தக் கட்டடத்துக்குள் சென்றேன். கதவு திறந்தே இருந்தது. விடுவிடென்று உள்ளே சென்றேன். சற்றுத் தூரத்தில் ஒரு விசாலமான கூடம் தெரிந்தது. அந்தக் கூடத்துச் சுவர்களில் பெரிய பெரிய படங்கள் மாட்டப்பட்டிருந்தன. ஜன்னல்களுக்குப் பட்டுத் திரைகள் விடப்பட்டிருந்தன. ஒரு ஜன்னலின் பட்டுத் திரை மட்டும் விலக்கப்பட்டிருந்தது. அந்த ஜன்னலுக்கு எதிரே ஒரு மூதாட்டி கையைக் கட்டிய வண்ணம் நின்று கொண்டிருந்தாள். அவள் எதையோ கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தக் கட்டடத்தில் அவளைத் தவிர வேறு மனிதர்கள் இருப்பதாகவே தோன்றவில்லை. அவ்வளவு நிசப்தமாக இருந்தது.

அந்த அம்மையாருக்கு வயது சுமார் ஐம்பது இருக்கும். அழகாகத் தலைவாரி முடிந்து கொண்டிருந்தாள். அவள் தலையில் நடுநடுவே பளிச் என்று தெரிந்த வெள்ளி மயிர்கூட அழகாகவே தோற்றமளித்தது. ஒரு வெள்ளைப் பட்டுப் புடவையை உடுத்தியிருந்தாள். அந்தப் புடவையின் ஓரத்தில் இருந்த பச்சைக் கரையும் அந்தக் கரையில் ஆங்காங்கு இருந்த சில மலர்களும் அந்த அம்மையாரை அப்படியே சுற்றித் தழுவிக் கொண்டிருக்கும் மலர்க் கொடிபோல் காணப்பட்டது. அந்த வெள்ளை ஆடைக்குள் மெலிந்த, கட்டமைந்த தேகத்தோடு விளங்கும் சித்திரப் பாவைபோல் அவ்வம்மையார் காணப்பட்டாள். அவள் புடவை உடுத்தியிருந்த விதமும் அவள் தலைவாரிக் கொண்டிருந்த அழகும், அந்தக் கூடத்தில் ஆங்காங்கு வைக்கப்பட்டிருந்த சாமான்களின் ஒழுங்கும் அவளை ஒரு மேதை என்று எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன.

ஆனால் அவள் அழகிய முகத்தில் இருந்த சில சோகக் கோடுகள் அவளை இந்த உலகத்தில் இருந்து வேறு எங்கேயோ அழைத்துச் சென்று விட்டன. அவள் நீண்ட மூக்கு, நீலக் கண்கள் பளபளவென்று மின்னின. அதன் பார்வை எதையோ கற்பனை செய்து பார்த்து அதில் லயித்து இருப்பதுபோல் தோற்றமளித்தது.

நான் அந்த அம்மையாரின் அருகில் சென்று சில நிமிஷங்கள் நின்று கொண்டிருந்தேன். அவள் என்னைத் திரும்பிப் பார்ப்பதாயில்லை. ஒருதரம் கனைத்தேன். அவள் என்னைக் கவனிக்கவே இல்லை. அங்கிருந்த சாமான்களைச் சத்தப் படுத்தினேன். அப்பொழுதும் அவள் என்னை லட்சியம் செய்ததாகத் தோன்றவில்லை. அவள் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் உள்ளவள்போலக் காணப்பட்டாள்.

என் தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு நானே முதலில் பேச ஆரம்பித்தேன்.

"நான் இங்கு வந்து வெகு நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறேனே!" என்றேன்.

"ஆமாம்" என்றாள்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. என்னைப் பார்த்து விட்டுத்தான் அவள் பேசாமல் இருந்திருக்கிறாளா! இப்பொழுதுகூட அவள் என்னைத் திரும்பிப் பார்க்கவில்லையே! யார், எங்கே வந்தாய்! என்று கூடக் கேட்கவில்லையே என்றெல்லாம் சிந்தித்தேன்; வியந்தேன்.

இந்த நிலையில் என் பார்வை அங்கு மாட்டியிருந்த ஒரு படத்தின்மீது விழுந்தது. என்னையும் அறியாமல் அந்தப் படத்தின் அருகில் சென்றேன். அதில் சிம்மத்தின் கண்களைப் போல் கம்பீரமாக நோக்கும் கண்ணழகும், சுருள் சுருளாகத் தொங்கும் கருத்த கேசமும், புன்சிரிப்பு தவழும் முகத்துடன் ஒரு கட்டழகன் நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். அந்த ஓவிய வாலிபனின் முக வசீகரமே ஒரு தனி அழகுதான். அவன் நாற்காலியில் உட்கார்ந்திருந்த பாவம் அவனை ஒரு கலைஞன் என்று எடுத்துக் காட்டியது. அந்த அழகிய ஓவியத்துக்கு அடியில் ஏதோ எழுதியிருந்தது. அதைப் படிக்க முடியவில்லை. இருந்தாலும் அதைப் படிக்காமல் இருக்க என் மனம் விரும்பவில்லை. இன்னும் சற்று அருகில் சென்று கூர்ந்து பார்த்தேன். "குமாரி குயிலிக்கு என் புது வருஷ வாழ்த்துக்கள். கடிகமணி—மணிவண்ணன்" என்று மணி மணியாக எழுதியிருந்தது.

இதைப் படித்து முடித்ததும் எனக்கு நடிக மணி - மணிவண்ணனின் புகழ் மனக் கண் முன்னால் வந்து விரிந்தது. நான் சிறு பையனாக இருக்கும்போது மணி வண்ணனின் நாடகத்தைப் பார்ப்பதற்காகவே என் தந்தை நல்கத் தாவிலிருந்து சென்னைக்கு வந்தார். மணி வண்ணனின் நடிப்பைப் பற்றி அப்பா அடிக்கடி புகழ்ந்து கொண்டே இருப்பார். எங்கள் வீட்டில் அப்பாவின் அறையில் மணி வண்ணன் கிருஷ்ணன் வேடத்தில் இருக்கும் ஒரு பெரிய படம்கூட இருக்கிறது. அந்த உன்னத ஓவியத்தைப் பார்த்து நானே பல தடவை வியந்து இருக்கிறேன். அந்த நடிகமணி – மணிவண்ணனா இந்த வாலிபன் என்று தெரிந்து கொள்வதற்காக அந்த அம்மாள் நின்று கொண்டிருந்த ஜன்னல் பக்கம் என் பார்வையைத் திருப்பினேன். என்ன ஆச்சரியம்! அவளை அங்கு காணவில்லை.

ஆனால் அவள் நின்று கொண்டிருந்த இடத்துக்கு நேர் பின்னால் அதே அழகியின் உருவம் அர்ச்சுனனின் தோற்றத்தில் கையில் காண்டிபம் ஏந்திக் கம்பீரமாக நிற்கும் காட்சியுடன் ஒரு பெரிய படம் காணப்பட்டது.

ஏதோ ஒரு உணர்ச்சியால் உந்தப்பட்டவன் போல நான் அந்தப் படத்துக்கு அருகில் சென்று வெறிக்கப் பார்த்தேன். இன்னும் துஷ்யந்தன் வேடத்திலும், வள்ளியின் கரம் பற்றிய முருகன் தோற்றத்திலும் பல படங்கள் அந்தப் பெரிய கூடத்தின் உயர்ந்த சுவர்களில் காட்சியளித்தன. எல்லாப் படங்களையும் ஒரு முறை பார்த்து அனுபவித்தேன். ஒவ்வொரு படத்திலும் மலர்ந்த சிரிப்புடனும், கவர்ச்சி மிகுந்த முகத்துடனும் மணி வண்ணன் கம்பீரமாகக் காணப்பட்டான்.



"இது எல்லாவற்றையும்விட இதில்தான் அவர் தத்ரூபமாகக் காட்சி அளிக்கிறார்!" என்று கையால் வரைந்த ஒரு படத்தை எடுத்து வந்து காட்டினாள் அந்த அம்மாள்.

எனக்கு மீண்டும் தூக்கிவாரிப் போட்டது. என்னை யார் என்று தெரிந்து கொள்ளாமலே நான் இந்தப் படங்களைப் பார்த்து அநுபவிக்கிறேன் என்று உணர்ந்து கொண்டாளே என்று எண்ணி வியந்தேன்.

என் வியப்பை அவள் தெரிந்து கொள்ளா வண்ணம் அடக்கிக்கொண்டு "இதை யார் எழுதியது!" என்று கேட்டேன்.

"நான்தான்" என்றாள். அப்பொழுது அந்த முதிர்ந்த முகத்தில் இதுவரையில் இல்லாத ஒரு நாணம் தோன்றியது. அப்பொழுது அவள் முகத்தில் தோன்றிய அழகை, வனப்பை விவரிக்க வார்த்தைகளே இல்லை.

"இந்த மனிதர் உயிருடன் இருக்கிறாரா!"

"இல்லை, இவர் இறந்து விட்டார்."

"நீண்ட காலம் ஆகிவிட்டதோ!"

"பதினைந்து ஆண்டுகள் ஆகின்றன."

"பதினைந்து வருஷங்கள் ஆகிவிட்டதா! அது தான் என் போன்றவர்களுக்கு அந்த மனிதரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை."

"நம் நாட்டின் துர்ப்பாக்கியமே அதுதானே! நாம்தான் நம் தலைவர்களையும், கலைஞர்களையும் போற்றி விழாக் கொண்டாடுவதில்லையே! நாம் கலைஞர்களையும், வீரர்களையும், தலைவர்களையும் போற்றி வணங்கினால்தான் கலைஞர்களும், வீரர்களும், தலைவர்களும் தோன்றுவார்கள். அந்தப் பண்பாடு நமக்கு எப்பொழுது ஏற்படப் போகிறதோ!" என்று ஏக்கத்தோடு கேட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள் அந்த மூதாட்டி.

அந்த அம்மாள் ஒரு விசித்திரப் பிறவி என்று தான் சொல்ல வேண்டும். பெரிய கட்டடத்தில் தன்னந் தனியாக எப்படித்தான் வசித்து வருகிறாளோ! இது போன்ற அபூர்வமான மனிதர்களும் உலகத்தில் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களுடைய வாழ்க்கையே ஒரு நம்ப முடியாத கதையாகத்தான் இருக்கிறது. அந்த அம்மாளைப் பற்றி மேலும் தெரிந்து கொள்ள முயன்றேன். முதலில் எதுவுமே கூற மறுத்து விட்டாள். பிறகு நான் ஒரு எழுத்தாளன் என்பதையும், நாடகக் கலையிலும், சங்கீதத்திலும் எனக்குள்ள ஆர்வத்தைப் பற்றியும் தெரிந்து கொண்ட பிறகு அந்த மூதாட்டி ஒருவாறு தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள்.

"என் சோகக் கதையைச் சொல்ல வேண்டுமானால் என் குடும்பத்தைப் பற்றி நீங்கள் முதலில் விவரமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆகையால் என்னுடைய குழந்தைப் பிராயத்திலிருந்தே என் கதையைத் தொடங்குகிறேன்.

"என் தந்தை கட்டட வேலை செய்யும் கொத்தனார். அத்துடன் கண்டிராக்டர் தொழிலும் செய்து வந்தார். அதாவது பெரிய பெரிய கட்டடங்களை ஒரு குறிப்பிட்ட தொகைக்குள் கட்டிக் கொடுப்பதாக முன்கூட்டியே குத்தகை எடுத்துத் தொழில் செய்து வருபவர். பார்ப்பதற்கு அப்படி ஒன்றும் சுந்தர புருஷராக இருக்க மாட்டார். இருந்தாலும் அவர் விசாலமான நெற்றியும், சற்று நீண்டு வளைந்த மூக்கும், கருணை ததும்பும் கண்களும், நிமிர்ந்த மார்பும், அடக்கமான சுபாவமும், நிதானமான பேச்சும் பார்ப்பவரை வசியப்படுத்தி விடும்.

"அவரை ஒரு முறை பார்த்தால் போதும். மிகவும் நல்ல குணம் உடையவர் என்றும், எப்போதும் சந்தோஷமாகக் கவலையின்றி இருப்பவர் என்றும் தெரிந்து விடும். அவர் அப்படி ஒன்றும் உயரமானவர் அல்ல. சராசரி மனிதர்களின் உயரத்துக்கும் சற்றுக் குறைவான உயரம் உடையவர்தான். ஆனால் அவரிடம் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தால் போதும். அவர் மிகப் பெரியவராக, நாம் இப்பொழுது பழகும் மனிதர்களுக்கெல்லாம் மேலானவராகத் தோன்றுவார்.




"இப்படி அவர் இருந்து வந்ததற்கு வேறு யாரும் காரணம் இல்லை. அவரேதான். அவருடைய நேர்மையும் உழைப்பும்தான் காரணம். உழைப்பதால் அவர் உள்ளம் சந்தோஷமடைந்தது. அதில் அவர் பணத்தைக் கண்டார்; மனத்தில் அமைதியையும் கண்டார்.

"ஆனால் அவர் பணத்துக்கு அடிமை ஆகி விடாமல் தன்னம்பிக்கையையும் உழைப்பையும் நம்பி வாழ்ந்து வந்தார்.

"அவர் மிகப் பெரிய செல்வந்தர்தான். அவருக்குக் கீழே எத்தனையோ சிற்றாள்களும், கொத்தனார்களும், கட்டிடங்களின் மாதிரிச் சித்திரங்கள் வரையும் தொழிலாளர்களும், இன்ஜினியர்களும் வேலை செய்து வந்தார்கள். இந்த நிலைமைக்கு அவர் வந்தது அவருடைய உண்மையும் உழைப்பும்தான் என்பதை அவர் உணர்ந்திருந்தார்.

"ஆனால் என் தந்தை செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தவர் இல்லை. செல்வாக்குள்ள மனிதர்களின் உதவியினாலும், கலாசாலைப் படிப்பினாலும் இந்த நிலையை அடைந்தவர் இல்லை. அதனால் பலர் அவரை அதிர்ஷ்டசாலி என்று சொல்லுவார்கள். ஜாதகப் பலன் என்று கதைப்பார்கள். காரணம் அவர் சாதாரண ஏழைக் குடும்பத்தில் பிறந்து கல்லூரிப் படிப்புக்கூட இல்லாமல் மனித சமூகத்தில் உயர்ந்து விட்டதுதான்.

"சாதாரண நிலைமையில் ஏழையாகக் குடிக்கக் கஞ்சியும் குடியிருக்க வீடும் பள்ளிக்கூடப் பட்டமும் பெறாத ஒரு மனிதன் நல்ல நிலைமைக்கு வந்து விட்டால் அந்த மனிதனை யாரும் பாராட்டுவதில்லை. அதற்குப் பதில் அவனைப் பொறாமைக் கண் கொண்டு பார்ப்பார்கள். அதிர்ஷ்டம் அடித்து விட்டது என்று அவனை அலட்சியப் படுத்துவார்கள். அந்த மனிதனுடைய தன்னம்பிக்கையையும், உழைப்பையும், முயற்சியையும் யாருமே போற்ற மாட்டார்கள். அதைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் முயல மாட்டார்கள்.

"இது இன்றைய உலக நிலை அல்லவா! அதை என் தந்தை நன்றாக அறிந்திருந்தார். இருந்தாலும் இப்படிப் பேசும் மக்களின் கூட்டத்தை நினைத்து மிகவும் வேதனைப் படுவார்.

"அவர் வேதனைப் படுவதும் நியாயம்தானே! அவருக்குத் தெரியும் அவர் வாழ்க்கை. அவர் இந்த நிலைமைக்கு வர பட்டபாடு உழைத்த உழைப்பு எல்லாவற்றையும் பற்றி அப்பாவே அடிக்கடி சொல்லுவார். 'அதிர்ஷ்டம் என்றோ, ஜாதகப் பலன் என்றோ அப்படி ஒன்றும் உண்மையில் இல்லை. இது பணம் படைத்தவர்களின் அகராதியில், சோம்பேறிகளின் வேதாந்தத்தில் இருக்கும் மாயச் சொல். ஏழைகளை ஏமாற்றி அவர்கள் உழைப்பைப் பெற்று சொத்தைப் பெருபவர்களின் வஞ்சகச் சொல்.

"'அதிர்ஷ்டம் என்றால் ஏதோ முன் செய்த பயன் என்றோ பெற்றோர்கள் செய்த புண்ணியம் என்றோ சொல்ல முடியாது. அதிர்ஷ்டம் என்பது மனிதனுடைய உள்ளம்தான். உண்மையான மனத்துடன் நேர்மையாக உழைக்கும் ஒருவனுடைய உள்ளத்துக்குத்தான் அதிர்ஷ்டம் என்று சொல்ல வேண்டும். அப்படி இன்றி அதிர்ஷ்டத்



வாங்க வந்தவர் :—கடைக் காரரே, இந்தக் கணக்குப் புத்தகத்தின் விலை என்ன?

கடைக்காரர் :—ஒரு ரூபாய்!

வாங்க வந்தவர் :—கொஞ்சம் பார்த்துச் சொல்லிக் கொடுங்கள், ஸார்!

கடைக்காரர் :—என்ன, சொல்லித் தருவதா? அது நம்மால் முடியாது. கணக்கு வாத்தியாரிடம் போங்கள்!

துக்கு வேறு மாதிரி அர்த்தம் செய்து கொண்டால் அதைப் பார்த்து இயற்கைத் தேவி, உழைப்புத் தெய்வம் கேலியாகச் சிரிப்பாள்.

" 'உழைப்பையும் ஊக்கத்தையும் விட்டு அதிர்ஷ்டத்துக்கும் சோதிடப் பலனுக்கும் மதிப்புக் கொடுத்தால் நல்லவர்களுக்கும் தீயவர்களுக்கும் உள்ள வித்தியாசமே இருக்காது. ராமனுக்கும் ராவணனுக்கும் இருக்கும் ஏற்றத் தாழ்வு, துரியோதனனுக்கும் தருமனுக்கும் உள்ள தாரதம்மியம் போய்விடும். காந்தி மகானையும் கதர் உடுத்திய கருப்பு மார்க்கெட்காரனையும் ஒரே மாதிரி நினைக்கத் தோன்றிவிடும். அதிர்ஷ்டம், கால பலன் என்பது உண்மையானால், சத்தியம், ஆத்ம பலம், உழைப்புச் சக்தி எல்லாமே அழிந்து விடும்' என்று சொல்லுவார். இந்த வாசகங்கள் என் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன.

"என் தாயாரிடம் அப்பாவுக்கு அளவற்ற ஆசை. நான் அவருக்கு ஒரே மகள். அவருக்குப் பழைய தமிழ் இலக்கியங்களில் நல்ல பற்று உண்டு. ஓய்ந்த நேரங்களில் எல்லாம் தமிழ்க் கவிதைகளைப் பாடிப் பாடி அனுபவிப்பார். அவருக்குத் தமிழின் மீது உள்ள பற்று காரணமாகத்தான் எனக்குக் 'குயிலினி' என்று பெயர் சூட்டினார். அவர் 'குயிலினி!' என்று என்னை அழைக்கும் போது குயில் தமிழ் பேசுவதுபோல் அவ்வளவு இனிமையாக இருக்கும். அவருக்கு நாடகம், நாட்டியம், சங்கீதம் முதலியவைகளில் அபார ஆசை உண்டு. எனக்குச் சங்கீதமும் நாட்டியமும் கற்றுக் கொடுத்தார். அந்தக் கலைப் பைத்தியமே என்னை இன்று இந்த நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டது என்றாலும் தவறாகாது. இருந்தாலும் இந்த என் ஏகாந்த வாழ்க்கையே எனக்கு இன்பமும் அமைதியும் தருவதாக இருக்கிறது.

"எனக்கு அப்பொழுது ஏழு வயதிருக்கும். மறந்து போன பழைய பாடல்களைப் போல விட்டு விட்டுச் சில சம்பவங்கள் நினைவில் இருக்கின்றன. திடீரென்று வீட்டில் ஒரே பரபரப்பு. நன்றாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்த என் தாயார் பேச்சு மூச்சற்றுப் படுத்துவிட்டாள். டாக்டர்கள் வந்து பார்த்தனர். என் தந்தை அங்குமிங்குப் போய்க் கொண்டிருந்தார். அவருடைய உள்ள உணர்ச்சிகள் அவர் களங்கமற்ற முகத்தில் நன்றாகப் பிரதிபலித்தன. அந்த சமயத்தில் அப்பாவிடம் ஒரு டாக்டர் வந்து அம்மாள் இனி பிழைக்க மாட்டாள் என்று சொல்லி விட்டுச் சென்றார். அப்பொழுது என் தந்தை பட்ட பாட்டை என்னால் இப்பொழுது கூட நினைத்துப் பார்க்க முடியவில்லை. ஆண் சிங்கத்தைப்போல் ஆண்மையோடு நிமிர்ந்து உட்கார்ந்திருப்பவர், இடி விழுந்தவர்போல் குனிந்து விட்டார். என்னை அப்படியே வாரி அணைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதார்.

"கட்டிலில் உயிரற்றுக் கிடந்த என் தாயைப் பார்த்தார். என்னை விட்டு விட்டு அந்தக் கட்டிலை நோக்கி ஓடினார். என் தாயாரின் உடலின் மீது விழுந்து அழுது புலம்பினார்" என்று கூறிவிட்டுச் சற்று அமைதியாக இருந்தாள். சட்டென்று எழுந்து அங்கு மாட்டியிருந்த தம்பதிகளின் படத்துக்கு எதிரில் போய் மௌனமாக நின்று விட்டாள். அது அவள் தாயும் தந்தையும் சேர்ந்து எடுத்துக்கொண்ட படம் என்று பின்னால் தெரிந்து கொண்டேன்.

நாங்கள் இருந்த கூடத்தில் பழங்காலத்து குளோப் விளக்குகள் இரண்டு எரிந்து கொண்டிருந்தன. குயிலினியின் கதையைக் கேட்ட சுவாரஸ்யத்தில் அந்த விளக்குகளை யார் ஏற்றியது என்பதை நான் கவனிக்கவில்லை. கூடத்தின் சுவர்களில் நடிகமணி - மணிவண்ணனின் படங்களுடன் குயிலினியின் பல தோற்றப் படங்களும் தொங்க விடப்பட்டிருந்தன. குயிலினி தன் பெற்றோர்களின் படத்துக்கு நேரே அமைதியாக நின்று கொண்டிருந்தாள். அவள் நின்று கொண்டிருந்த இடத்துக்கு அருகில் வேலைப்பாடுடன் கூடிய ஒரு அலமாரியில் தம்பூரா ஒன்று வைத்திருந்தது. அதற்குப் பக்கத்தில் இருந்த ஜன்னல் கண்ணாடியின் வழியாகத் தெரு விளக்கின் வெளிச்சம் லேசாகத் தெரிந்தது.

அந்த அறை முழுவதும் கலை மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. அது போலவே குயிலினியின் குரலிலும், அவள் பேசும் வார்த்தைகளிலும், அவள் நடக்கும் நடையிலும் கலை மணம் வீசியது.

குயிலினி மேலே கதையைத் தொடர்ந்தாள் :

"என் தகப்பனார் என் தாயைப் பிரிந்த பிறகு பத்து ஆண்டுகள் வாழ்ந்தார். எனக்காகவே இன்னொரு கல்யாணம் செய்து கொள்ளாமல் இருந்தார். தன்னுடைய தொழிலைத் தன்னிடம் வேலை செய்து வந்த சிப்பந்திகளிடமே ஒப்புவித்து விட்டு எனக்கு என் வாழ்நாள் முழுவதும் போதும் அளவுக்கு வேண்டிய செல்வத்தை என் பெயருக்கு எழுதி வைத்தார். என் நினைவு வந்த நாளிலிருந்து என் தந்தை, யாரையும் அதட்டிப் பேசியதையோ கோபித்துக் கொண்டதையோ நான் பார்த்ததில்லை. என்னை ஒரு ஆண் பிள்ளையைப் போலவே வளர்த்து வந்தார். என் இஷ்டப்படி இருக்க எனக்கு உரிமையும் வழங்கினார்.

"என் பள்ளிக்கூடப் படிப்பு முடிந்து கல்லூரிப் படிப்பு ஆரம்பமாகும்போது என்னுடைய பதினேழாவது பிறந்த நாளை வெகு சிறப்பாகக் கொண்டாடினார். அந்த விருந்துக்கு மணிவண்

ணன் வந்திருந்தார். அப்பா என்னை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அப்பொழுதே மணிவண்ணன் என்னைக் கவர்ந்து விட்டார். ஒரு சில விநாடி நேரம்தான் அவரிடம் பழகினேன். இந்த குறைந்த நேரத்துக்குள்ளாகவே மணிவண்ணனை என்னால் மறக்க முடியவில்லை. அப்படி ஏதோ ஒரு சக்தி அவரிடம் இருந்தது.

"அப்பா அன்றைக்கு எல்லாக் காரியங்களையும் தாமே ஓடி ஓடிக் கவனித்தார். இரவு வெகு சீக்கிரமே தம்முடைய படுக்கை அறைக்குச் சென்று விட்டார். அவர் அன்றைய தினம் ஒன்றுமே சாப்பிடவில்லை. அதற்குப் பிறகு மூன்றும் நாள் அவர் மரணப் படுக்கையில் படுத்து விட்டார். அவருடைய கம்பீரமான உடல் படுக்கையில் கிடந்தபோது கூட அவர் தன்னம்பிக்கையை இழந்து விடவில்லை. என்னை அருகில் அழைத்து 'குயிலினி! உனக்கு ஏராளமான சொத்து இருக்கிறது. அதை உன் இஷ்டம்போல் செலவழிக்கலாம். ஆனால் தன்னம்பிக்கையும் தைரியமும் மிகவும் அவசியமானது. உழைப்பில்தான் இன்பம் இருக்கிறது' என்று சொன்னார். அது அவருடைய வாழ்க்கைச் சரித்திரத்தையே இரண்டு வரியில் என்னிடம் கூறியது போலிருந்தது.

"அவர் இறந்துபோன அன்று இந்த உலகத்தில் உள்ள மனிதர்கள் அத்தனை பேருமே இறந்து விட்டது போலிருந்தது. என் தகப்பனாரின் மரணத்தால் என் வாழ்க்கையின் பாதை திடீரென்று தடைபட்டு விட்டதை உணர்ந்தேன். ஆனால் அவர் கடைசியில் சொன்ன தன்னம்பிக்கையும், தைரியமும் என் துக்கத்தைத் துடைத்துவிட்டன. என்னுடைய அமைதி இழந்த மனம் எதிர்காலத்தைப் பற்றி எண்ணத் தொடங்கியது.

"என்னுடைய தூரத்து உறவினர் ஒருவர், என் தந்தையின் உதவியால் முன்னுக்கு வந்தவர் எப்பொழுதும் எங்கள் வீட்டோடேயே இருந்து வந்தார். அவரை நான் மாமா என்று அழைத்து வந்தேன். அந்த மாமாதான் எனக்குத் துணையாக என்னோடு இருக்கச் சம்மதித்தார். அவர் எனக்குத் துணை என்பதைத் தவிர வேறு ஒன்றுமில்லை. என் எண்ணத்துக்கு இணைந்து கொடுப்பவர்; மிகவும் நாணயமும் கண்ணியமும் உள்ளவர்; பரந்த நோக்கம் கொண்டவர்; சதா உலகத்தையும் அதில் வாழும் ஏழை எளிய மக்களையும் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவர்; எந்தக் காரியத்திலும் மிருதுவாகவும் கனிவாகவும் நடந்து கொள்வார். அவர் என்னைப் பார்த்துச் சொன்னார்:

"'குயிலினி! நீ இப்பொழுது சுதந்திரம் அடைந்து விட்டதாக நினைக்கலாம். ஆனால் மனிதன் சுதந்திரமானவன் அல்ல. அவன் எப்பொழுதுமே தன் சுற்றுச் சார்புகளுக்கு ஏற்ப அடிமையாகி விடுகிறான். ஆகையால் நீ இந்த உலகத்தில் ஜாக்கிரதையாக வாழ வேண்டும். அதிலும் நீ ஒரு பெண் என்பதை மறந்துவிடாதே!' என்றார்.

"'என் தந்தையின் பராமரிப்பில் எனக்குத் தன்னம்பிக்கையும் தைரியமும் இருக்கிறது. அதனால் என் எதிர்காலம் நன்றாகவே இருக்கும்' என்று அவரிடம் கூறினேன்.

"'அது கிடக்கட்டும். உனக்கு நாடகம் என்றால் ரொம்பவும் பிடிக்குமே. இன்று மணிவண்ணன் 'சகுந்தலை' நாடகத்தில் துஷ்யந்தனாக நடிக்கிறானாம்' என்றார். நானும் அவரும் அன்று இரவே சகுந்தலை நாடகத்துக்குப் போனோம்."

குயிலினி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்திருந்து மணிவண்ணன் துஷ்யந்தன் வேஷத்திலிருந்த படத்துக்கு அருகில் சென்றாள். பிறகு திரும்பிவந்து மேலே கதையைத் தொடர்ந்தாள்:

"அன்று மணிவண்ணன் துஷ்யந்தனாக மேடையில் தோன்றினார். மணிவண்ணனை மேடையில் பார்ப்பதற்கும் நேரில் பார்ப்பதற்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் தோன்றியது. சாட்சாத் துஷ்யந்த மகாராஜாவே மேடையில் வந்து நிற்கிறாரோ என்று எண்ணி வியந்து விட்டேன். அப்பொழுது ஒரு புதிய குரல் கேட்டது. சகுந்தலை நாடக மேடையின் இன்னொரு மூலையில் காட்சியளித்தாள். அவளைப் பார்ப்பதற்காகத் திரும்பிய துஷ்யந்தன் முதல் வரிசையில் உட்கார்ந்திருந்த என்னைப் பார்த்தார். ஒருமுறை ஆச்சரியத்தோடும் புன்முறுவலோடும் என்னைப் பார்த்தார். கண்ணாடியில் தெரியும் சந்திரனைத் தன்னுடையது என்று நினைத்துப் பிடிப்பதற்குத் துடித்த குழந்தையைப் போல நான் துஷ்யந்தனுடைய பார்வையை அனுபவிக்கத் தொடங்கினேன். துஷ்யந்தனின் கண்களில் ஒளி வீசியது. அவருடைய உதடுகளில் புன்முறுவல் தவழ்ந்து விளையாடியது. அவருடைய முகத்தில் காதல் நடனமாடியது. அவருடைய உடல் சகுந்தலையின் உடல் நெளிவுக்குத் தகுந்தாற்போல் நெளிய ஆரம்பித்து விட்டது. அவர் சகுந்தலையைப் பார்த்தார். சகுந்தலை அவரைப் பார்த்தாள். ஒரு கணம் இருவரும் ஒன்றுமே பேசவில்லை. ஆனால் அவர்கள் கண்கள் பேசின. அவர்களுடைய ஒவ்வொரு அவயவங்களும் பேசின. இருவரும் ஒருவரை ஒருவர் நெருங்கி வந்தனர். சபையோர் கரகோஷம் செய்தனர். வாலிபர்கள் 'ஆகாகா!' என்றனர். என் வயதை ஒத்த பெண்கள் இந்த உலகையே மறந்து உட்கார்ந்து விட்டனர். மணி வண்ணனைப் போல் காதல்



திருடன்:—ஏன் நீங்கள் இப்படி அலறுகிறீர்கள்?

கான்ஸ்டேபிள்:—நான் வைத்திருந்த 'அசோகா' பொட்டலங்கள் திருட்டுப் போய் விட்டன. இந்த ஜெயிலின் அறை யாரோ திருடி யிருக்கிறீர்கள்.

கட்டங்களில் உணர்ச்சியோடு நடிப்பதற்கு அவருக்கு ஈடு அவரே தான். எப்படியோ அவர் எண்ணற்ற ரஸிகர்களைத் தமக்கென்று ஏற்படுத்திக் கொண்டு விட்டார். அன்று இரவு என் மனம் இருந்த நிலைமையை, என் உள்ள உணர்ச்சியை என்னால் விவரித்துக் கூறமுடியாது. ஆனால் அன்றுதான் முதன் முதலாக அழகுத் தெய்வத்தோடு மானசீகமாக உறவாடினேன் என்பதை மட்டும் என்னால் உறுதி கூறமுடியும்.

'நாடகம் முடிந்தது. நான் மணிவண்ணனை நேரில் பார்ப்பதற்காக அவர் வேஷம் தரித்துக் கொள்ளும் அறைக்குள் சென்றேன். அங்கு என்னைப் போலவே ஏராளமான பெண்மணிகள் மணிவண்ணனைப் பார்க்க வந்திருந்தனர். அவருடைய நடிப்பைப் புகழ்ந்து கொண்டிருந்தனர். அவர் புகழ் மொழிகளுக் கெல்லாம் மறுமொழி கூறுவதுபோல் ஒரு புன்முறுவல் செய்தார். சிலரை நன்றி உணர்ச்சியுடன் பார்த்தார். அவர் அழகிய கண்களில் ஆழ்ந்த அமைதியான ஒளி வீசியது. பெண்களோ அவரைச் சுற்றிச் சுற்றி மலரைச் சுற்றிவரும் வண்ணாத்திப் பூச்சிபோல வளைய வளைய வந்து கொண்டிருந்தனர்.

" சற்று நேரத்துக்குப் பிறகு லேசாகப் புன்முறுவல் செய்த வண்ணம் என்னைப் பார்த்தார். 'நாடகம் எப்படி இருந்தது!......என்......!' என்று வார்த்தைகளை முடிக்காமலே என் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளும் பாவனையாக என்னை ஆவலோடு பார்த்தார்.

" 'அடாடா! அற்புதம், அற்புதம்! சாட்சாத் துஷ்யந்த மகாராஜனையே பார்த்து மகிழ்ந்தேன். அந்த சகுந்தலை மிகவும் பாக்கியசாலி' என்றேன்.

" 'தாங்கள் மட்டும் சகுந்தலையாக என்னுடன் நடித்திருந்தால் இன்னும் பிரமாதமாக நடித்திருப்பேன். உங்கள் ரோஜாப்பூ போன்ற சிவந்த கன்னங்களுக்கும், நீண்ட விழிகளுக்கும், குவிந்திருக்கும் பவளம் போன்ற சிவந்த உதடுகளுக்கும், கொடிபோன்ற தங்கள் உடல்கட்டுக்கும் சகுந்தலை வேஷம்,—சகுந்தலை வேஷம் என்ன! எந்த வேஷம் போட்டுக் கொண்டாலும் மிகப் பொருத்தமாக இருக்கும்' என்றார். என் முகத்தை ஒரு முறை கம்பீரமாகப் பார்த்தார்.

" நான் அவருடைய பேச்சில் என்னையே மறந்து விட்டேன். அவருக்கு அருகில் நின்று கொண்டிருப்பதையே பெரிய பாக்கியமாக நினைத்து விட்டேன். அவருடைய கேள்விக்கு மறுமொழி சொல்லவே எனக்குத் தோன்றவில்லை.

" இந்தச் சமயத்தில் என்னுடன் வந்த மாமா ஏதோ சொல்ல ஆரம்பித்தார். 'இயற்கையிலேயே அழகுடையவர்கள் நடிப்பதற்கு நாடக மேடைக்குப் போகவே கூடாது. அவர்களுடைய ஒவ்வொரு செயலும் 'ஒரு கலைதானே! அதிலும் குயிலின் சாதாரணமாக நடந்தாலே போதும். அந்த அழகையே பார்த்துக் கொண்டிருக்கலாம். நாட்டியமும் நடனமும் கூடக் குயிலியின் சாதாரண நடைக்குத் தாளம்போட வேண்டும். ஆகையால் அவன் நாடக மேடையில் ஏறி நடிக்க ஆரம்பித்து விட்டால் இந்த உலகம் தாங்காது. மேலும் அவன் நாடக மேடை ஏறி நடிக்கவே கூடாது' என்று சொன்னார்.

"இதைக் கேட்டதும் மணிவண்ணன் அவருடன் வாதம் புரிய ஆரம்பித்து விட்டார். நான் அவர்கள் வாதத்தில் குறுக்கே புகுந்து 'இதை இன்னொரு நாளைக்கு வைத்துக் கொள்ளலாம். இப்பொழுது போய் வருகிறோம்' என்று மணிவண்ணனிடம் விடை பெற்றுக் கொண்டேன்.

" எனக்கு நாடகம் என்றாலே கொஞ்சம் பிரியம் அதிகம்தான். அதனால் அந்தத் தொத்து நோய் என்னையும் பிடித்து விடுமோ என்று பயந்தேன். என்னைப் பற்றி மணிவண்ணன் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் என்னுடைய காதுகளில் தேன்மாரி பொழிந்து கொண்டிருந்தது.

" வீட்டுக்குச் சென்றோம். சாப்பாட்டை எல்லாம் முடித்துக் கொண்டு என் மாமாவிடம் பேசிக் கொண்டிருந்தேன். 'எனக்கு மணிவண்ணனை ரொம்பவும் பிடித்திருக்கிறது. கல்யாணம் செய்து கொள்வதாயிருந்தால் அவரையே தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்' என்று சொன்னேன்.

" மாமா மெதுவாகச் சிரித்தார்.

" மறுநாள் மாலை. இயந்திரம் போல் அன்றும் நாடகத்துக்குக் கிளம்பினோம். அன்று சகுந்தலை நாடகம் இல்லை. பவளக்கொடி நாடகம் நடந்தது. மணி வண்ணன் அர்ஜுனனாகத் தோன்றினார். தன் நிகரற்ற அழகால், பாவபூர்வமான நடிப்பால் அனைவரையும் கவர்ந்து விட்டார். பவளக் கொடியாக நடித்தவள் பலதடவை நாடகத்தையே மறந்து மணிவண்ணனிடம் காதல் மொழி பேச ஆரம்பித்து விட்டாள். நேற்று துஷ்யந்தன்; இன்று அர்ஜுனன். இரண்டும் வேறு வேறு சூழ்நிலையை உடையது. இரண்டிலும் மணிவண்ணன் அபாரமாக நடித்தார்; அற்புதமாகப் பாடினார்; கணீரென்று பேசினார்.

" அவரைப் பாராட்டுவதற்காக மறுநாள் அவர் வீட்டுக்கே போனேன். நீண்ட நேரம் அவர் நடிப்பின் திறமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். ஆனால் அவர் அருகில் பல சமயம் நான் பேச்சற்றே உட்கார்ந்து விட்டேன். அவருடைய ஒவ்வொரு அவயத்தையும் பார்த்து அனுபவித்துக் கொண்டே இருந்து விட்டேன். அந்தச் சமயத்தில் என்னோடு படித்த இன்னொரு பெண் கமலி அங்கு வந்தாள். கமலி மணிவண்ணனை அபாரமாகப் புகழ்ந்தாள். அந்த மாதிரி என்னால் மணிவண்ணனைப் புகழ முடியவில்லையே என்று வருந்தினேன். மணிவண்ணனும் கமலியுடன் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார். அவள் ரஸிக உள்ளத்தைப் புகழ்ந்து கூறினார். அவளுக்கு நாடகக் கலையில் இருக்கும் ஆர்வத்தைப் பெரிதும் பாராட்டிப் பேசினார். அப்பொழுது என் மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சியை இப்பொழுது நினைத்தால் கூட என் இதயம் தீப்பட்டு எரிவது போன்ற உணர்ச்சி உண்டாகிறது. கமலியின் புகழ் மொழியில் மணிவண்ணன் மயங்கி விடுவாரோ என்று நான் மிகவும் கவலைப்பட்டேன்.

" நான் கவலைப்பட்டது போலவே நடந்து விட்டது. மணிவண்ணன் என்னைவிடக் கமலியை மிகவும் நேசித்தார் என்பது அவர் அவளுடன் பழகிய விதத்திலிருந்து தெரிந்து கொண்டேன். எனக்கு என்னவோ போலிருந்தது. கமலியை அப்படியே கழுத்தைப் பிடித்து யாராவது வெளியில் தள்ள மாட்டார்களா என்று நினைத்தேன். அவளை எனக்கு ஒரு எதிரியாக நினைத்தேன். அதற்கு மேல் என்னால் அங்கு இருக்க முடியவில்லை. மணிவண்ணனிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பி விட்டேன். 'கமலி என்னிடம் ஏதோ சொல்ல ஆரம்பித்தாள். நான் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு அங்கிருந்து கிளம்பி விட்டேன். அப்படி நடந்து கொண்டதை நினைக்கும் போதெல்லாம் எனக்கே ஆச்சரியமாக இருக்கும். ஒரே கணத்தில் நான் எவ்வளவோ மாறி விட்டதை என்னால்



## என்ன புதுமை
## என்ன மென்மை
## .......என்னே அழகு!

குளுமையும் இனிய வாசனையும் பொருந்திய டாம்கோ ஓ டி. கொலோனின் உதவியால் உங்கள் அழகை புதுமையுறச் செய்து, மாலை வேளைகளில் உஷ்ணத்தின் தாபத்தை நீக்கி குளிர்ச்சியுடனும் உல்லாசத்துடனும் திகழுங்கள்.

டாம்கோ ஓ டி. கொலோன் சோப்பை உபயோகித்து உங்கள் கைகளையும் வனப்பையும் மென்மையாக, மழமழப்பாக, நறுமணங்கமழ வைத்துக் கொள்ளுங்கள்.

இவ்விரு அழகூட்டும் சாதனங்களும் உண்மையில் உங்களை பிரதி தினமும் அதிக கவர்ச்சியுறச் செய்வதுடன், நாள்தோறும் புதுமை குன்றாமல் வைத்திருக்கவும் செய்யும்.

டாம்கோ

**ஓ டி கொலோன்**

மற்றும்

**ஓ டி கொலோன் சோப்**




TS 7362

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

உணர முடிந்தது. அடாடா! காதலுக்குத்தான் எவ்வளவு சக்தி. அது மனிதனைத் தெய்வமாகவும் ஆக்கி விடுகிறது. மிருகமாகவும் மாற்றி விடுகிறது!

"மாமா என் மன நிலையை உணர்ந்து கொண்டார். அவருக்கு என்னிடம் அளவற்ற அன்பு உண்டு. அதனால் என் நிலை கண்டு வேதனைப் பட்டார். 'குயிலினி! எதிலும் நிதானம் தவறக் கூடாதம்மா! அப்பா கடைசிக் காலத்தில் உன்னிடம் சொன்னதை எல்லாம் அதற்குள் மறந்து விட்டாயா?' என்று கேட்டார்.

"எனக்கு அவர் சொன்னது ஒன்றும் காதில் ஏறவில்லை. மணி வண்ணன் பிற பெண்களுடன் பேசுவதைத் தடுக்க வேண்டும். அதிலும் அந்தக் கமலியுடன் அவர் பழகவே கூடாது. அதற்கு ஏதாவது வழி கண்டு பிடிக்க வேண்டும் என்று முடிவு செய்தேன். உடனே மணிவண்ணன் வீட்டுக்குச் சென்றேன். ஏதோ பைத்தியம் பிடித்தவள் போல மணி வண்ணனுடன் பேசினேன். பேசும்போதெல்லாம் கமலியைப் பற்றி ஏதாவது இகழ்ந்து கூறத் தொடங்கினேன். பிறகு தினம் தவறாமல் மணிவண்ணன் வீட்டுக்குப் போக ஆரம்பித்தேன். மணிவண்ணன் வீட்டைத் தேடி வரும் பல பெண்களை நானே சந்தித்து மணி வண்ணனைப் பார்க்க முடியாது என்று கூறித் திருப்பி அனுப்பினேன். ஆனால் அந்தக் கமலியை மட்டும் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அவளும் தினம் வந்தாள். மணிவண்ணனிடம் மணிக் கணக்கில் பேசிக் கொண்டிருந்தாள். அவள் சென்றதும் உடனே மணிவண்ணனிடம் அவளைப் பற்றி ஏதாவது குறை கூறுவேன்.

"மணிவண்ணன் இதையெல்லாம் காதில் வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை. அவர் நாடக மேடையில் சிரிப்பது போலவே அலட்சியமாகச் சிரித்தார்; இல்லை, நடித்தார். கடைசியில் அவரிடம் கேள்விலேயே கேட்டுவிடுவது என்று தீர்மானித்தேன். 'மணிவண்ணா! நான் உங்கள்மீது பிரியமாக இருக்கிறேன் என்பதை உணருகிறீர்களா?' என்று கேட்டேன்.

"'எனக்கு யாருடைய பிரியமும் வேண்டியதில்லை. உங்களைப் போலவே எத்தனையோ பேர் என்னிடம் பிரியமாக இருக்கிறார்கள். ஆனால் நான் எல்லாரிடமும் பிரியமாக இருக்க வேண்டியவன். என்னுடைய பிரியத்தை ஒரே ஒருவரிடம் மட்டும் செலுத்த முடியாது. எனக்கு வேண்டியதெல்லாம் சுதந்தரம்தான்' என்றார்.

"என்னால் மேலே பேச முடியவில்லை. நான் பேசவும் விரும்பவில்லை. ஆகவே மௌனமாக உட்கார்ந்திருந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே குயிலினி எழுந்திருந்தாள். எழுந்து அங்கு அலங்காரமான அலமாரியில் பட்டு மெத்தையின்மீது வைத்திருந்த தம்பூராவிடம் சென்றாள்.

"இந்தத் தம்பூரா மணி வண்ணனுடையது. இதை மீட்டிக் கொண்டு அவர் பாட ஆரம்பித்து விட்டால் வான வெளியில் மிதப்பதுபோல இருக்கும். தங்க ஊஞ்சலில் உட்கார்ந்து வானத்துக்கும் பூமிக்கும் ஆடுவதுபோல் இருக்கும். அப்போது ஏற்படும் இன்பம் விவரிக்க முடியாதது. வாழ்நாள் முழுவதும் அவர் பாட்டைக் கேட்டுக்கொண்டே இருக்கலாம். மணிவண்ணன் கை பட்டதும் இந்தத் தம்பூராவிலிருந்து எழும் நாதம் குயில் கொஞ்சிக் கொஞ்சிக் கூவுவது போலிருக்கும். தம்பூரா சுருதியுடன் இழைந்து அவர் பாடும் பொழுது கண்ணன் குழலிசை கேட்டுக் கோகுலத்துப் பெண்கள் கூட்டமாக வருவது போல் பெண் மணிகள் அந்தத் தேனிசையை நாடி ஓடுவார்கள். அடடா! அவர் கீதத்தை ஒரு தரம் கேட்டவர்கள் மீண்டும் மறக்கவே மாட்டார்கள். அது அவர்கள் காதில் ரீங்காரமிட்டவண்ணம் இருக்கும்," என்று கூறி விட்டு மீண்டும் எனக்கு எதிரில் வந்து உட்கார்ந்தாள். மேலே கதையைத் தொடர்ந்தாள்:

"'நான் செல்லுமிடங்களில் எல்லாம் என்னைப் பணக்காரப் பெண்மணிகள், பாட்டுக்காரப் பெண் மணிகள், நாகரிகமான பெண்மணிகள், நடன மணிகள், வக்கீல் வீட்டுக் குமாரிகள், நீதிபதி வீட்டுப் புதல்விகள், போலீஸ் உத்தியோகஸ்தரின் புத்திரிகள் இன்னும் அரசியல் தலைவர்களின் அருமைக் குமாரிகள், தொழில் அதிபர்களின் பெண்மணிகள் என் ஒருவன் மீது காதல் கொண்டிருக்கிறார்கள். நான் என்ன செய்வேன். ஒரு ஆண் பிள்ளை அழகுள்ளவனாகவும் கொஞ்சம் திறமை யுள்ளவனாகவும் இருந்தால் அவன் நிம்மதியாகவே வாழ முடியாது போலிருக்கிறது. அவர்கள் விருப்பத்துக்கு நான் இணங்கவில்லை யென்றால் என்னை உணர்ச்சியற்றவன் என்கிறார்கள். ஆண் தன்மையே இல்லாதவன் என்று ஏகத்தாளம் செய்கிறார்கள். இவன் நடிப்பு வர வரக் கீழே போய்க் கொண்டிருக்கிறது. சரீரமும் முன்போல் இல்லை என்று மூடி மறைத்துப் பேசித் திரிகிறார்கள். ஆனால் அவர்களே பலபேர் அறிய என்னை இந்திரன் சந்திரன் என்று புகழ்கிறார்கள். எனக்கு மட்டும் சுதந்திரம் கிடையாதா, என்ன! நான் என் இஷ்டப்படி வாழவே முடியாதா!' என்று ஏக்கத்துடன் கூறினார் மணிவண்ணன்.

"'நான் நல்ல நடிகனாக இருக்க விரும்புகிறேன். ஆகையால் யாருடைய காதலையும் நான் விரும்பவில்லை. காதலை அப்படி எனக்குக் கட்டாயப் படுத்திப் புகுத்த முடியுமா! வாழ்க்கை என்ன ஒரு நாடகமா! அதையும் என்னால் நடிக்க முடியுமா! ஊஹூம்! ஒருநாளும் முடியாது. ஆகையால் யாரும் என்னைக் காதல் புரியும்படி கட்டாயப் படுத்தாதீர்கள். குயிலினி! தயவு



தபால்காரன்:—ஸார், நீங்கள் தானே சுந்தர தாமோதர கோபால மாதவன்? உங்கள் பெயருக்கு ஒரு எக்ஸ்பிரஸ் தந்தி வந்திருக்கிறது!

அவர்:—அப்படியா? பெயருக்கு முன்னாலே என்ன 'இனிஷியல்' போட்டிருக்கிறது? 'ஸி'யா? 'டி'யா?

செய்து என் மீது கொண்டிருக்கும் பிரியத்தை, அன்பை, காதலை மறந்து விடுங்கள். என்னையும் கொஞ்சம் சுதந்திரமுடையவனாக இருக்கவிடுங்கள். நான் மன நிம்மதியுடன் இருந்தால்தான் நாடகத்தில் நான் ஏற்றுக்கொண்ட பாகத்தை நன்றாக நடிக்க முடியும். மக்களை மகிழ்விக்க முடியும்' என்று சொன்னார். அவர் அப்பொழுது உணர்ச்சியோடு பேசினார்; உண்மையாகவே பேசினார். பிறகு எங்கேயோ மேற்கூரையைப் பார்த்த வண்ணம் அமைதியாக இருந்தார்.

"மணிவண்ணன் அப்பொழுது நாற்காலியைப் பிடித்துக் கொண்டு கம்பீரமாக நின்று கொண்டிருந்தார். வெள்ளை வெளேரென்று பட்டு ஜிப்பா அணிந்து கொண்டிருந்தார். அவருக்கு வெண்பட்டு மீது ஆசை அதிகம். எப்போதுமே வெள்ளை ஆடைகளைத்தான் அணிந்து கொள்வார். நாடகத்தில் தான் அவரால் அதைக் கடைப்பிடிக்க முடியவில்லை. அப்பொழுது அவருடைய வனப்பு மிகுந்த முகத்திலே எத்தனையோ சிந்தனைகள் ஒன்றோடு ஒன்று மோதிக் கொண்டு வந்தது நன்றாகத் தெரிந்தது. அமைதியாக என்னைப் பார்த்தார். வழக்கமான புன்னகை அவர் இதழ்களிடையே குமிழியிட்டுக் கொண்டிருந்தது. கண்கள் பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தன.

"'குயிலினி! நான் அடுத்த வாரம் இந்த ஊரை விட்டுப் போகிறேன். எங்கள் நாடகக் கம்பெனி கலை வார்த்த மதுரைக்குப் போகிறது. அனேகமாக அடுத்த பௌர்ணமியன்று மதுரையில் நாடகமாடுவேன்' என்று சொன்னார்.

"அந்த வார்த்தைகள், அவர் சொன்ன பாவம் எல்லாம் மீண்டும் அவர் மீது எனக்கு உள்ள காதலை அதிகப் படுத்தவே உதவியது. நான் அவர் இன்றி வாழ முடியாது என்பதை உணர்ந்தேன்."

அதற்குமேல் குயிலினி பேசவில்லை. மௌனமாக உட்கார்ந்திருந்தாள். அவள் முகத்தில் பழைய காலத்து நினைவுகள் சூழ்ந்து கொண்டு வந்தன என்பதை அவள் முகபாவங்கள் எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன. அவள் கை விரல்கள் அவளையும் அறியாமல் அவளுடைய இன்னொரு கையை மெதுவாக வருடிக் கொண்டிருந்தன.

"மணிவண்ணன் என்ன அப்படிப்பட்ட அழகுடையவரா!" என்று கேட்டேன்.

"அதில் என்ன சந்தேகம். மனித வர்க்கத்திலேயே அவர்தான் அழகுள்ளவர். அழகுமட்டும் தானா? உயர்ந்த கலைப் பண்பு நிறைந்தவர். சுத்தமான இதயமுள்ளவர். சுருங்கச் சொன்னால் குழந்தையைப் போன்ற இதயமும் எல்லாம் தெரிந்த மேதையின் அறிவும் பெற்றவர் என்றுதான் சொல்ல வேண்டும். நீங்களே சற்று நேரம் இந்தப் படத்தைக் கூர்ந்து பாருங்கள். நான் சொல்லுவது எல்லாம் உண்மை என்பதை உணருவீர்கள்" என்று அங்கிருந்த மணிவண்ணனின் படத்தை எடுத்து எனக்கு எதிரில் வைத்தாள்.

அவள் அந்தப் படத்தை எடுத்து வைக்கும் போதுகூட மிகுந்த மரியாதையோடு வைத்தாள். அவள் அந்தப் படத்தைப் பிடிக்கும்போது அவள் கைவிரல்கள் ஏதோ புஷ்பத்தைத் தொடுவது போல நளினமாக இருந்தன.

நான் மணி வண்ணனின் படத்தைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்த ஓவிய முகத்தில், சித்திர உருவத்தில் ஏதோ ஒரு சக்தி இருப்பதை உணர்ந்தேன். "நீங்கள் இந்த மனிதர் உயிருடன் இருக்கும்போது அவருடன் பழகும் பாக்கியம் பெற்றிருக்கிறீர்கள். நீங்கள் மிகவும் கொடுத்து வைத்தவர்கள்தான்" என்றேன்.

"நீங்கள் இதை இன்றைக்குச் சொல்லுகிறீர்கள்! கமலி இதை அப்பொழுதே சொன்னாள். கடைசியில் நான் கொடுத்து வைத்திருந்ததும் அவ்வளவுதான். உங்களைப் போன்றவர்கள் என்னைப் பார்த்துக் 'கொடுத்து வைத்தவள்' என்று சொல்லுகிறீர்களே அதுதான்" என்றாள். மேலே கதையைத் தொடர்ந்தாள்:

"அடுத்த பௌர்ணமிக்குள் மணிவண்ணன் மதுரைக்குப் போய்விட்டார். அவர் ஊரை விட்டுப் போகும்போது ஊரே திரண்டு வந்து அவருக்கு வழி அனுப்பி வைத்தது. அவர் வழக்கம்போலவே சிரித்துக் கொண்டிருந்தார். எல்லாரிடமும் விடை பெற்றுக் கொண்டார். எல்லாரிடமும் விடை பெற்றுக் கொள்ளுவது போல்தான் என்னிடமும் விடை பெற்றுக் கொண்டார். ஆனால் கமலி மட்டும் என்னிடம் வந்து 'மணி வண்ணனுக்கு உன்னை விட்டுப் பிரியவே மனம் வரவில்லை. உன்னிடம் வந்ததும் அப்படியே தேன் குடித்த வண்டு மாதிரி மயங்கி நின்று விட்டார். நீ அவரை எப்படியோ மயக்கி விட்டாய்' என்றாள்.

"அவள் வார்த்தைகள் என் மனத்தை வாள் கொண்டு அறுப்பது போலிருந்தன. என் வேதனையை, மணிவண்ணனின் உண்மையான உள்ளத்தைத் தெரிந்து கொள்ளாமல் பேசுகிறாளே என்று துயரப் பட்டேன். கூடவே இந்த உலகத்தையும் நினைத்து வருத்தப் பட்டேன்.

"மணி வண்ணனின் பிரிவு என்னை மிகவும் துன்பப் படுத்தியது. தனிமையின் கஷ்டத்தை உணர ஆரம்பித்தேன். மணிவண்ணனைப் பார்க்காமல் இருக்க முடியாது போலாகிவிட்டது. திடீரென்று புறப்பட்டு மதுரைக்குப் போகவும் மனம் துணியவில்லை. கடைசியில் என்னுடைய நிலைமையைத் தெளிவுபடுத்தி என் இதயத்தைத் திறந்து காட்டி ஒரு நீண்ட கடிதம் எழுதினேன். ஒரு நாள் மணிவண்ணனிடமிருந்து கடிதம் வந்தது. அதைப் பொங்கி வரும் ஆசையோடு பிரித்துப் படித்துப் பார்த்தேன்.

'குயிலினி! என்னைக் கல்யாணம் செய்து கொள்ளும் ஆசையை மறந்துவிடு. ஆனால் நான் உன்னை என்றும் மறக்க மாட்டேன்.

நடிகமணி - மணிவண்ணன்.'

என்று மட்டும் எழுதியிருந்தது. அந்த இரண்டு வரிகளையும் திருப்பித் திருப்பிப் படித்துக் கொண்டே இருந்தேன். எத்தனை முறை படித்தேன் என்பதை என்னால் சொல்ல முடியாது.

"கடைசியில் என் உணர்ச்சியை என்னால் கட்டுப் படுத்த முடியவில்லை. சிறு குழந்தையைப் போல விம்மி விம்மி அழுதேன். கோவென்று கதறினேன். எனக்கு வேறு ஒன்றுமே செய்யத் தோன்றவில்லை. நான் வேறு என்னதான் செய்திருக்க முடியும்!" என்றாள்.

குயிலினியின் கண்களிலிருந்து அப்பொழுது நீர் தாரை தாரையாக வழிந்தது. கண்கலங்கி இருந்ததால் அவளால் எதையும் பார்க்க முடியவில்லை. கண் தெரியாதவள்போல என்னைப் பார்த்தாள். நான் அவள் முகத்தைப் பார்க்க முடியாமல் ஜன்னலைப் பார்த்தேன். வெளியில் மழை தூறிக் கொண்டிருந்தது. ஜன்னல் கண்ணாடியில் மழைத் துளிகள் சிதறி முத்து முத்தாகக் காட்சி அளித்தன. அடுத்த கணம் அந்த மழைத் துளிகள் எல்லாம் குயிலினியின் நீர் வழியும் நீண்ட கண்களாகத் தோற்றமளித்தன. என்னால் அந்தக் காட்சியைப் பார்க்க முடியவில்லை. (அடுத்த இதழில் முடியும்)

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116 - 119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

**Regd. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*

# "இது சுலபம்...

## லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகுடன் விளங்குங்கள்" என்று கூறுகிறார்

## ராகினி



ராகினி கூறுவதாவது: "நான் வழக்கமாக லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து பெறும் சரும பாதுகாப்பை ஒருபொழுதும் தவறவிடமாட்டேன். லக்ஸ் டாய்லட் சோப்பின் சருமத்திற்கு ஊட்டமளிக்கும் சக்தி என் சருமத்தில் அற்புத மாறுதலை ஏற்படுத்தியிருப்பதைக் காண்கிறேன்... சருமத்திற்கு புது சோபையும், மகிழ்ச்சிதரும் வழவழப்பும் அளித்திருக்கிறது."




# லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 369-50 TM